23rd September 1958] [Mr. Speaker]

the discussion on the Panchayats Bill. Yesterday, we decided that only Leaders of Parties will speak today. But, in view of the desire expressed by many more hon. Members to speak on this Bill, I shall allow the general discussion to proceed just now so that those hon. Members who wish to take part in the discussion may do so. After the meeting of the Business Advisory Committee, I shall announce its decision. I still feel that Members must speak only for ten minutes each. As I have got requests from a large number of members, I fix a time-limit of 10 minutes for each speaker. Now, Sri Selvarajan will speak.

## (2) THE MADRAS PANCHAYATS BILL, 1958 (L.A. BILL NO. 33 OF 1958)—*cont.*

**SRI M. S. SELVARAJAN :** கனம் சபாநாயகர் அவர்களே, நீண்ட நாள் நினைவு, வெகு கால முயற்சி இனிமேல் பலன் தரும் அளவில் இந்த பஞ்சாயத்து மசோதா இங்கு கொண்டு வரப்பட்டிருக்கிறது. அதைப்பற்றி சில வார்த்தைகளைப் பேச ஆசைப்படுகிறேன். பஞ்சாயத்து மசோதாவின் தொடர்ச்சியாகவே ஜில்லா அபிவிருத்தி கவுன்சில் அமைப்பும் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஆகவே ஜில்லா அபிவிருத்தி கவுன்சிலின் எல்லையை வரையறுக்க ஜில்லாக்களை பல பகுதிகளாகப் பிரிக்கும் அடிப்படையில் ஜில்லா அபிவிருத்தி கவுன்சில் அமைக்கப்பட்டிருக்கிறது. ஜில்லாவினுடைய தலை நகர அமைப்பு ஜில்லாக்களின் அமைப்பு இவைகள் எல்லாம் வெகு காலமாகவே பரம்பரையாக சரித்திர பூர்வமானதாக இருந்து கொண்டு வருகிறது. கடந்த சில வருஷங்களாக ஜில்லாவை ஒரு யூனிட்டாக வைத்து எவ்வளவோ அபிவிருத்தி வேலைகள் எல்லாம் நடந்து வந்திருக்கின்றன. அவைகள் எல்லாம் நிறைவேற்றப்பட்டும் இருக்கின்றன. சிற்சில பாசன வசதிகளும், அணைக்கட்டு திட்டங்களும் அமைக்கப்பட்டு அவைகளும் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. சில புதிய அணைத் திட்டங்களின் பாசன அமைப்பு விதிகள் இன்னும் பூர்த்தியாகவில்லை. இப்படிப்பட்ட புது அமைப்பினால் ஏற்கனவே செய்து வந்த பல முக்கியமான வேலைகள் எப்பகுதியைச் சேர்ந்தது என்று ஒதுக்கப்படுவதன் காரணமாக மக்களின் சுமுகம் தவறிவிட இடம் கொடுத்து விடக்கூடாது. ஜில்லா பிரிவினை காரணமாக சிக்கனம் தேடும் இந்நாளில் சிக்கனத்திற்கு பதில் அதிகச் செலவு ஏற்பட்டு விடும் என்று நான் அஞ்சுகிறேன். அத்தியாவசியம் எனக் கருதினால் சில பெரிய ஜில்லாக்களை வேண்டுமானால் பிரித்து அமைத்துக்கொள்ளலாம். சேலம், கோயம்புத்தூர் போன்ற 30 லட்சம் ஜனத்தொகைக்கு அதிகமாகவுள்ள ஓரிரண்டு ஜில்லாக்களை பிரிக்கவேண்டும் என்று நினைத்தாலும் அப்படி பிரித்து அமைத்து நிர்வாகம் செய்து கொள்ளலாம் என்பது என்னுடைய அபிப்பிராயம். புதுக்கோட்டையை தலை நகராகக் கொண்ட ஒரு ஜில்லாவையும் அவசியமானால் அமைத்துக்கொள்ளலாம். அப்படி அமைக்கும்போது திருச்சியிலிருந்து சில பகுதிகளையும், ராமனாதபுரத்திலிருந்து சில பகுதிகளையும் எடுத்து புதுக்கோட்டையுடன் சேர்த்து ஒரு புது ஜில்லாவாக ஆக்கினாலும் ஆக்கலாம். சட்டசபை அங்கத்தினர், கீழ் சபை அங்கத்தினர் ஒருவர் தமது உத்தியோக முறையில் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலின் அங்கத்தினராவார் என்றும் அப்படி அவர் ஆகும்போது அவர் அதில் எக்ஸ் அபிஷியோ முறையில் அங்கம் வகிப்பார் என்றும் அவருக்கு தீர்மானம் அனுப்பவதற்கோ அல்லது கேள்விகள் கேட்கவோ உரிமை உண்டென்றும் ஆனால் தன்னுடைய வாக்குரிமையை அளிக்கவோ கூடாது என்றும் சொல்லப்படுகிறது. சட்டசபை, கீழ் சபை அங்கத்தினர்கள் யூனியன் கவுன்சிலுக்கு தேர்ந்தெடுக்கப்பட்டும் மெம்பராக வரலாம். அவர்களுக்கு இப்படிப்பட்ட ஓட்டளிக்கும் அதிகாரம் இல்லாமல் இருப்பது சரிதானா என்று அறிய விரும்புகிறேன். மேல் சட்டசபை அங்கத்தினர்கள் சிலர் ஸ்தல ஸ்தானப் பிரதிநிதிகள், மேல்சபை அங்கத்தினர்கள், பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் இதில் அங்கம் வகிக்கக்கூடாது என்ற நிலைமை இருப்பதை மாற்றி அமைக்க வேண்டும். தற்போது திட்ட அடிப்படையில் நடந்து வரும் பல வேலைகளுக்கு ராஜ்ய, மத்திய அரசாங்கங்களின் மானியங்களும் அனுமதியும்

[Sri M. S. Selvarajan] [23rd September 1958

தேவைப்படுகின்றன. ஆகவே இப்படிப்பட்ட அங்கத்தினர்கள் அவைகளில் பரிபூரணமாக அங்கம் வகிக்கவும் வாக்குரிமைகளை பரிபூரணமாக கொடுக்கவும் அவர்கள் இடம் பெறுவதற்கு வழி செய்ய வேண்டும். ஒருக்கால் டுயல் ரெஸ்பான்ஸ்பிலிட்டி இருக்கக்கூடாது என்பதற்காக இப்படி அமைக்கப்பட்டிருக்கிறதோ என்னவோ. நிர்வாகப்பொறுப்பேற்கத் தடை செய்து வாக்குரிமை கொடுப்பதில் எந்த விதமான தவறும் இல்லை என்பது என்னுடைய கருத்து. பஞ்சாயத்து யூனியனுக்குப் பிரதிநிதிகளாக பஞ்சாயத்துத் தலைவரைத்தான் தேர்ந்தெடுத்தாக வேண்டும் என்றும் அங்கத்தினர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி இல்லாமல் வெளியாரைத் தேர்ந்தெடுக்க வாய்ப்பு இம்மசோதாவில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதைப்பற்றியும் பரிசீலனை செய்ய வேண்டும். சில கிராமங்களில் இருக்கக்கூடிய சிலர் போட்டியில் தோல்வி அடைந்திருக்கலாம் அல்லது அவர்களுக்கு தேர்தலில் கலந்து கொள்வதற்கு வாய்ப்பு இல்லாமல் போயிருக்கலாம். அத்தகையோருக்கு யூனியன் பிரதிநிதிகளாக வருவதற்கு வழங்கப்படும் வாய்ப்பு கிராமத்தில் சுமுக நிர்வாகத்திற்கு வழி செய்யும். ஆகையால் வெளியாரைத் தேர்ந்தெடுக்கவிருக்கும் உரிமை சரியானதே. மேஜர் பஞ்சாயத்துக்களின் நிர்வாகப் பொறுப்பாளியான நிர்வாக அதிகாரிகளின் வரம்பற்ற அதிகாரத்தை முறைப்படுத்த பஞ்சாயத்துத் தலைவருக்கும் கூட்டுப்பொறுப்பளிக்கும் விஷயம் முன்பே பரிசீலனையிலிருந்தது. எக்சிக்யூடிவ் ஆபீசர்களுடன் செக்கில் கையெழுத்திட கவுன்டர் சிக்நேசர் செய்வதற்கு உரிய வாய்ப்பு தலைவருக்குக் கொடுக்கலாம். இது போன்ற காரியங்களில் பஞ்சாயத்து தலைவர் எக்சிக்யூடிவ் அதிகாரியை கலந்து கொள்ளவும், தவறுகளை நீக்கவும் இந்த முறையை வகுக்கலாமா என்பதை பரிசீலனை செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். இதுபோல பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களின் தலைவராக இருக்கக்கூடியவர்கள், கமிஷணரோடு அதிகாரத்தை எந்த அளவு பகிர்ந்து கொள்ளலாம் என்பதைப் பரிசீலனை செய்யவேண்டும்.

10-10 a.m. முனிசிபல் சட்டத்தின் பிரகாரம் முனிசிபாலிட்டியிலே இருக்கும் காலி நிலங்களுக்குக் கூட தண்ணீர் தீர்வை, லைட் தீர்வை போன்றவை விதிப்பது மூலம் நிலத்திற்குக்கூட தீர்வை விதிக்கும் அதிகாரம் முனிசிபல் கவுன்சில்களுக்குக்கூட இருக்கிறது. அதுபோன்று டவுன் பஞ்சாயத்துக்களுக்கும் கிராமப் பஞ்சாயத்துக்களுக்கும் அங்குள்ள காலி நிலங்களுக்குத் தீர்வை விதிக்கும் அதிகாரத்தை வழங்குவது மூலமாக அரசியல் சட்டத்தின் உண்மையான கருத்துப் பிரகாரம் பஞ்சாயத்துக்கள் "யூனிட்ஸ் ஆப் ஸெல்ப்-கவர்ன்மெண்ட்" என்று சொல்லக்கூடிய முறையில், பூரண அதிகாரமுள்ள பஞ்சாயத்து அமைப்புகளாக அமைவதில் தவறு என்ன என்பதைப் பரிசீலனை செய்ய வேண்டியது அவசியம்.

ஜில்லா போர்டுக்கு மாற்று ஸ்தாபனம் என்ற கருத்தோடு, ஜில்லா போர்டு நிர்வாகத்திலே இருந்துவந்த பாடசாலைகளை பஞ்சாயத்து யூனியனுடைய பொறுப்பிலே மாற்றவேண்டும் என்ற கருத்துப்படத்தான் ஒப்படைக்கப்படவேண்டும் என்பது என்னுடைய வேண்டுகோள். அரசாங்கமே ஜில்லா போர்டு பாடசாலைகளை எடுத்துக்கொள்வதில் தவறு இல்லை என்று சிலர் நினைத்தாலும், ஜில்லா போர்டு ஆரம்பப் பாடசாலைகளை பஞ்சாயத்து யூனியனில் ஒப்படைப்பதில் தவறில்லை என்பது என் அபிப்பிராயம். ஜில்லா போர்டு பாடசாலைகள் அல்லாத, சர்க்கார் உதவி பெறும் ஆரம்பப் பள்ளிகளுடைய நிர்வாகத்திற்கு பஞ்சாயத்து யூனியன் கையிலே கிராண்டு கொடுக்கும் பொறுப்பை ஒப்படைப்பது என்பது சரியல்ல. பாடசாலை ஆசிரியர்களாக தொழில் புரிவதற்கு வர வர பெண்களுக்கு கவர்ச்சி ஏற்பட்டு வருகிற காலத்தில், பஞ்சாயத்து நிர்வாகிகள் கையிலோ அங்கத்தினர்கள் கையிலோ விளையாட்டுக் கருவிகளாக ஆசிரிய, ஆசிரியைகள் ஆகிவிடுவார்களோ என்று நான் கவலைப்படுகிறேன். ஆகவே, இதுபோன்றவைகளில் விஷப் பரிட்சை வேண்டாம் என்பது என்னுடைய வேண்டுகோள். எப்படி ஹைஸ்கூல் நிர்வாகங்களுக்கு அரசாங்கம் ஜில்லா கல்வி அதிகாரி சிபாரிசு மூலமாக மான்யம் வழங்குகிறதோ, அதுபோன்று உதவிபெறும் ஆரம்பப்

23rd September 1958] [Sri M. S. Selvarajan]

பாடசாலைகளைப் பொறுத்தும் அரசாங்கமே பொறுப்பை வைத்துக்கொண்டால் நன்றாக இருக்கும். பின்னர் அவசியம் ஏற்பட்டால், ஜில்லா போர்டு பாடசாலைகளை நிர்வகிப்பதை பார்த்து பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலிடம் ஒப்படைக்கலாமா என்பதை யோசித்துக்கொள்ளலாம்.

(Deputy Speaker in the Chair.)

இன்றையதினம் இருக்கும் பஞ்சாயத்துக்களுக்குக் கூட சுயேச்சையான, யூனிட் ஆப் ஸெல்ப் கவர்ன்மென்ட் என்ற கருத்துப் படும்படியாக இருந்தாலுங்கூட, அரசாங்கத்தினுடைய மான்யத்தை எதிர்பார்த்துத்தான் சில காரியங்களைச் செய்யவேண்டிய நிலைமை இருக்கிறது. அதைத் தவிர்க்க முடியவில்லை. பஞ்சாயத்தின் நிதி நிலைமைகளை வளர்ப்பதற்கு வழிவகை செய்யலாம்.

பஞ்சாயத்து ஏரியாவில் இயங்கிவருகிற சந்தைகளை, பஞ்சாயத்துக்களிலேயோ பஞ்சாயத்து யூனியனிலேயோ ஒப்படைக்கும் அளவுக்கு அதிகாரம் அரசாங்கத்திற்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. அதிலே சில சந்தைகள் கோயில், தர்ம ஸ்தாபனங்களின் நிர்வாகத்திற்காக சிற்சில இடங்களில் இருக்கின்றன. அப்பேர்ப்பட்ட தர்ம காரியங்கள், நல்ல காரியங்களுக்கு ஒரு கெடுதல் வந்துவிடாத அளவுக்கு எந்த வகையில் பஞ்சாயத்துகளிலேயும் பஞ்சாயத்து யூனியனிடத்திலேயும் ஒப்படைக்கலாம் என்பதைப் பரிசீலனை செய்து தக்க விதமாக ஒப்படைப்பது நல்லது என்று நான் கருதுகிறேன்.

SRI S. NAGARAJA MONIGAR: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் பேசுவதிலிருந்து ஏதோ கொஞ்சம் பயமாக இருப்பதுபோல் தெரிகிறது. இந்த மசோதா வருவதில் அவருக்கு கொஞ்சம் அதிருப்தி இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

SRI V. SUBBIAH: உதவி சபாநாயகர் அவர்களே, சட்ட சபை ஆரம்பிப்பதற்கு முன்னால் நமது கட்டிடத்தின் பேரில் இருக்கும் கொடி மரத்தைப் பார்த்தேன். அதில் நம்முடைய தேசத்தின் சின்னமாகிய தேசீயக்கொடி இன்று காலையிலிருந்து பறக்கப்படவில்லை. அதற்குக் காரணம் உண்டா அந்தக்கொடி இல்லாமல், சபை நடவடிக்கைகள் நடப்பது பொருத்தம் உடையதா? அப்படிப் பறக்க விடப்படாததற்குக் காரணம் என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: நம் சபையைப் பொறுத்தவரையில், நம்முடைய கட்டிடத்தின் மேல் கொடி கட்டப்பட்டிருக்கிறது. மற்ற கொடியைப்பற்றி நமக்கு அதிகாரமில்லை.

SRI M. S. SELVARAJAN: பஞ்சாயத்தோ, பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலோ நிறைவேற்றக்கூடிய தீர்மானங்கள் அல்லாது அவசியமான காரியங்களுக்கு எமர்ஜன்ஸி ப்ரொவிஷன்படி, அங்குள்ள கமிஷனர் "இன் ஆண்டிசிபிஷேன் ஆப் தி அப்ரூவல் ஆப் தி கவுன்சில்" சிற்சில காரியங்களைச் ஸாங்ஷன் செய்யலாம் என்று, சில வகைகளுக்குப் பணம் ஒதுக்கீடு செய்யலாம் என்று இருக்கிறது. அவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் இந்த அதிகாரம் சில காலத்திற்கு முன்பு ஜில்லா போர்டு தலைவர் வகித்து வந்த அதிகாரம் என்பதை கனம் அங்கத்தினர்களுக்கு நான் ஞாபகப்படுத்தவேண்டிய அவசியம் இல்லை என்று கருதுகிறேன். ஜில்லா போர்டு தலைவருக்குக் கொடுக்கப்பட்டிருந்த அந்த அதிகாரம், இப்பொழுது கமிஷனருக்குக் கொடுக்கப்படுவதற்குப் பதிலாக, பஞ்சாயத்து யூனியன்களின் தலைவராக அமையக்கூடியவர்களுக்கு அத்தகைய அதிகாரம் கொடுக்கப்படுவதில் தவறு என்ன என்பதை அரசாங்கம் ஆலோசனை செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

* SRI T. P. ELUMALAI: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தக் கிராமப் பஞ்சாயத்து மசோதாவை ஆதரித்துச் சில வார்த்தைகள் சொல்ல பிரியப்படுகிறேன். நம்முடைய நாட்டிலே ராம ராஜ்யம் அமைப்பதற்குப் பல படிகளை அமைக்கின்ற வகையில் இந்தச் சட்டங்களெல்லாம் நமக்குப் பயன்படும் என்று நான் நம்புகிறேன்.

[Sri T. P. Elumalai] [23rd September 1958

நம்முடைய ராஜ்யத்திலே 11 ஜில்லா போர்டுகள் இருந்தன. அத்தனை ஜில்லா போர்டுகளிலும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள்தான் அதிகமாக தலைமைப் பதவியில் இருந்தார்கள். அப்படி இருப்பதன் காரணமாக ஓரளவு கட்சியினுடைய வளர்ச்சியைப் பாதுகாத்துக்கொள்வதற்கு முடியும். இருந்தாலும், நாட்டிலே இருக்கும் அத்தனை ஓட்டர்களுக்கும் நல்ல வாய்ப்பை இந்தச் சட்டம் அளிக்கப்போகிறது. சட்டத்தின் நுணுக்கங்களை மற்ற ஓட்டர்களும் தெரிந்துகொள்கிற அளவுக்கு, கடமை உணர்ச்சி அவர்களுக்கும் ஏற்படுவதற்காகத்தான், ஓரளவு கட்சி சுயநலம் இருந்தாலும், அதையெல்லாம் விட்டொழித்து, எல்லா மக்களுக்கும் நல்ல வாய்ப்புகளைக் கொடுக்கின்ற அளவில் ஏறக்குறைய இந்த ராஜ்யத்தில் 358 பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களை அமைத்து, அவைகளின் பொறுப்புக்களை மக்களிடத்தில் ஒப்படைக்க இந்த மசோதா வழி செய்கின்றது.

குறிப்பாக நம்முடைய சட்டசபை கூடிய பிறகு நல்ல நல்ல சட்டங்களை எல்லாம் நாம் கொண்டுவந்திருக்கிறோம். அத்தனை சட்டங்களுக்கும் மக்களுக்குப் பயன்படவேண்டுமானால், கிராமப் பகுதிகளிலே அந்தச் சட்டங்கள் எப்படி அமுலில் நடக்கின்றன என்பதை எல்லோரும் கண்காணித்துக் கொள்ளவேண்டும். நாம் ராம ராஜ்யம் என்று சொல்கிற போது, அதற்காக பஞ்சாயத்துக்களுக்கெல்லாம் நல்ல அதிகாரங்கள் கொடுக்கவேண்டும் என்றெல்லாம் சொல்கிறோம். ஆனால், பஞ்சாயத்து தேர்தல்கள் நடந்துகொண்டு வருகின்றன. எந்தக் கிராமத்திலேயும் சச்சரவு இல்லாது ஒரு பஞ்சாயத்தையும் நாம் அமைக்க முடியாத நிலைமை இன்றைக்கு கிராமத்தில் இருக்கிறது. அதிகமான சச்சரவுகளெல்லாம் கிராமத்தில் ஏற்படுகிறது. ராம ராஜ்யத்தை அமைக்கவேண்டுமென்று நினைக்கிறபோது, ராவண ராஜ்யம் அமைகின்ற முறையிலே பஞ்சாயத்து தேர்தல் ஒவ்வொரு கிராமத்திலே நடந்துகொண்டிருக்கிறது. இதற்கெல்லாம் சட்டம் என்ன செய்யும்? இது சட்டம் செய்ததினால் வந்த கோளாறு அல்ல; மந்திரி சபையின் மீதும் கோளாறு சொல்ல முடியாது; ஒரு சில மக்கள் பக்குவப்படவில்லை என்றுதான் சொல்லவேண்டும். கட்சியிலே இருக்கின்றவர்கள் ஒரு சிலர் பக்குவப்படவில்லை என்பதைத்தான் நாம் காணமுடிகிறது. ஆகையால், எந்த சட்டங்கள் நாம் செய்தாலும், சுமுகமான முறையில் அது நாட்டிலே நல்ல விதமாக பயனைக் கொடுப்பதற்காக எல்லோரும் ஒன்றுபட்டு நாம் உழைக்க வேண்டுமென்று நான் இந்தச் சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கின்றேன்.

மந்திரி சபையினர் நல்ல முறையிலே இந்த மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள். பஞ்சாயத்துத் தேர்தல் இப்பொழுது நடந்துகொண்டிருக்கிறது. பஞ்சாயத்துத் தலைவர்கள் வரப்போகிறார்கள். அவர்களுக்கு அதிகமான அதிகாரங்கள் கொடுக்கவேண்டியது அவசியம். அவர்களுக்கு அதிகாரம் இல்லாதிருந்தால், எந்த வேலையும் அந்த கிராமத்தில் நடக்க முடியாது என்பது மந்திரி சபைக்கே நன்றாகத் தெரியும். கொஞ்சங் கொஞ்சமாக அதிகாரத்தை மக்களிடையே பரப்பவேண்டும். அதற்காக வேண்டி, கிராமந்தோறும் பஞ்சாயத்துக்களை அமைத்துவிட்டு, அவைகளைச் சரியாக நடத்துவதற்கு ஒரு பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலையும் ஏற்படுத்தி, அதற்கென கமிஷனர்களெல்லாம் நியமித்து கிராம அபிவிருத்திக்கு வழிகாட்டியாக இருக்கும் முறையில் பஞ்சாயத்துக்களையும் பஞ்சாயத்து யூனியன்களையும் அமைத்திருப்பதுபற்றி நான் பெருமைப்படுகிறேன். ஒரு கட்டிடம் கட்டுவதற்கு ப்ளானும், பணமும் அவசியம். அதையெல்லாம் போட்டு, கட்டிடத்தையும் கட்டுவதற்கு ஏற்பாடு செய்துவிட்ட பிறகு, அதைப் பார்க்க வருபவர்கள் ஏதோ ஒரு இடத்தில் ஜன்னல் வைத்தால் நன்றாக இருக்கும், காற்று வரும் என்று நோட்டம் பார்த்துச்
12-20 p.m. சொல்லிவிடுவது சுலபம். ஆனால், முன்னாலே திட்டம்போட்டு சொல்வதற்கு வேண்டிய திறன் இருக்கவேண்டும். அந்தத் திறன் நமது மந்திரிசபைக்கு இருந்திருக்கிறது. இதை மற்ற கட்சியில் இருப்பவர்கள் கூட பாராட்டவேண்டியது அவசியம் என்று நான் கேட்டுக்கொள்கிறேன். அப்படி ஏதாவது ஒரு நல்ல சட்டம் கொண்டு வந்துவிட்டால் அதைக் கொண்டு வந்த அமைச்சரைத் தனியாகப் பாராட்டுகிறார்கள். கட்சியினால்

23rd September 1958] [Sri T. P. Elumalai]

தான் அமைச்சர் இருக்கிறார். கட்சி அங்கத்தினர்களால்தான் அவர் உரம் பெறுகிறார். ஆகவே நல்ல சட்டம் கொண்டுவரும்போது தனிப்பட அமைச்சரைப் பாராட்டினாலும், அமைச்சர் அவையைப் பூராவாகப் பாராட்ட வேண்டும். அவரது கட்சியைப் பாராட்டவேண்டும். இங்கு மட்டிலும் அல்ல, பொதுமக்களிடத்தில் இவர்களது நல்ல எண்ணத்தையும், திறத்தையும் பாராட்டிப் பேசவேண்டும் என்று எல்லாக் கட்சிக்காரர்களையும் கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் சட்டசபை அங்கத்தினர்கள் பஞ்சாயத்து கவுன்ஸிலிலும் அங்கத்தினராக இருப்பதற்கு வசதி செய்து கொடுத்திருக்கிறார்கள். இருப்பினும் அங்கே எங்களுக்கு ஓரளவு மதிப்பு இருக்கத் தக்க வகையில் சில உரிமைகள் எங்களுக்குக் கொடுக்கப்படவேண்டும். பொதுவாக கல்யாண காலத்தில் நல்ல சீர் கொடுக்கவேண்டுமென்று பெண் வீட்டார் விரும்பலாம். ஆனால் பணத்தைச் சேகரித்துக்கொள்ளாத நிலைமையில் இருப்பவர்கள், கல்யாணச் செலவுக்கே என்ன செய்வது என்கிற நிலைமையில் உள்ளவர்கள் எப்படிச் சீர் கொடுப்பார்கள்? அப்படியே எங்களுக்கு எவ்வித உரிமையும், அதிகாரமும் இல்லாது, அந்தக் கவுன்ஸிலில் கலந்து கொள்கிறபோது அவர்களிடத்தில் இருந்து எங்களுக்கு மதிப்பும், கௌரவமும் உண்டாகும் என்று எப்படி நினைப்பது? அங்கே எங்களுக்கு வோட்டுரிமை இல்லாத காரணத்ினால் நல்ல வரவேற்பு இருக்காது. ஆகவே எங்களுக்கு சில உரிமைகளும், ஓட்டுரிமையும் கொடுக்கவேண்டும் தலைவராக இருக்கக் கூடாது என்று செய்தாலும் பரவாயில்லை கவுன்ஸிலுக்கு என்று கேட்டுக் கொள்கிறேன்.

அதுமட்டுமல்லாமல் இதனுடைய நிர்வாகச் செலவைக் குறைக்கவும் வழி செய்யவேண்டும். முன்பு நமது ராஜ்யத்தில் 11 மாவட்ட போர்டுகள் இருந்தன. அவற்றை இப்போது எடுத்துவிட்டதன் காரணமாக 358 பஞ்சாயத்து கவுன்ஸில்கள் அமைய இருக்கின்றன. இதனால் முன்பு ஜில்லா போர்டுகளுக்கு ஆன செலவைவிட அதிகமாக நிர்வாகச் செலவு ஆகாத படிக்கு கண்காணிப்புடன் நடந்துகொள்ள வேண்டுமென்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

மேலும் தாழ்த்தப்பட்டவர்களும், தாய்மார்களுக்கும் இந்தக் கவுன்ஸிலுக்கு வருவதற்கு ஒரு வாய்ப்புக் கொடுத்திருக்கிறார்கள். இதை வரவேற்கிறேன். இந்த வாய்ப்புக் கொடுக்கவில்லையென்றால் அவர்களால் கவுன்ஸிலுககு வரமுடியாது. இப்போதே பஞ்சாயத்து கவுன்சிலின் தலைவராகவும், மெம்பர்களாகவும் வருவதற்குப் போட்டி போட ஆரம்பித்துவிட்டார்கள். முன்கூட்டியே வேலை மும்முரமாக நடந்து கொண்டிருக்கும் போது, ஹரிஜனங்களுக்கும், மாதர்களுக்கும் இந்த வாய்ப்பு இல்லாவிட்டால் அவர்களால் எப்படி வரமுடியும் என்பதாக நாங்கள் அச்சப்பட்டதுண்டு. அந்த அச்சத்திற்கு இடமில்லாமல் இந்த வாய்ப்பைக் கொடுத்திருக்கும் சர்க்காருக்கு எங்களது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

திராவிட முன்னேற்றக் கட்சியைச் சேர்ந்தவர்கள் பேச்சை ஆரம்பிக்கும் போதும் முடிக்கும்போதும் திராவிடக் கட்சியின் சார்பிலே என்று சொல்லிக் கொள்வது வழக்கமாக இருக்கிறது. அது அவர்களது கட்சிக்கு ஊக்கத்தையும் ஆக்கத்தையும் அளிக்கும் என்று நம்புகின்றார்கள். அப்படியே காங்கிரஸ் கட்சியின் சார்பிலே கொண்டுவரப்படுகிற உயர்ந்த சட்டங்களைப் பாராட்டிப் பேசும்போது காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்கள் கட்சியை சொல்வது கிடையாது. ஆனால் நல்லதொரு சட்டம் என்று பாராட்டும்போது, அதைக் கொண்டுவருகிற அமைச்சரையும், அந்த அமைச்சரவையையும், அவர்களுக்குப் பக்க பலமாக இருந்து அந்தச் சட்டத்தைக் கொண்டுவருவதற்குத் துணையாக இருக்கிற கட்சியையும் பாராட்டவேண்டும். மேலும் பொதுமக்களிடத்திலேயும் புகழவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகின்றேன். உதவி சபாநாயகர் அவர்களே, திராவிட முன்னேற்றக் கட்சித் தலைவர் பேசும்போது "கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்தால்

அது உருகும்போது பிடித்துக்கொள்ளலாம் " என்பதைப்போல சில சட்டங்கள் கொண்டுவருகின்றூர்கள் என்று சொன்னூர். அப்படி நாங்கள் செய்யவில்லை. கட்சி சுயநலம் இருந்திருந்தால், எங்கள் கட்சி கையில் இருந்த ஜில்லாபோர்டுகளை ஒழித்துவிட்டு, கிராமந்தோறும், 358 பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில்களை ஆரம்பிக்க வேண்டிய அவசியம் இல்லை என்பதை தெரிவித்துக்கொண்டு, இந்த மசோதாவை, மனப்பூர்வமாக ஆதரித்து என் பேச்சை முடித்துக்கொள்கின்றேன். வணக்கம்.

SRI K. RAMACHANDRAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, பஞ்சாயத்து சட்டத்தின் கீழ் ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். பஞ்சாயத்து சட்டத்தைப் பொறுத்த வரையிலும்—நமக்குப் பஞ்சாயத்து என்பது புதியதானது அல்ல. ஏற்கெனவே சரித்திர காலம் தொட்டே பஞ்சாயத்துகளினுலே நல்ல பலனைக் கொண்டிருக்கிறோம்—என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். முன் காலத்திலேயே ஆங்காங்கே பஞ்சாயத்துக்கள் அமைந்திருக்கின்றன என்பதற்கு ஆதாரங்கள் இருக்கின்றன. அன்றைய நிலையில் எப்படி அமைந்திருந்தன இன்றைய நிலையில் எப்படி கிராம பஞ்சாயத்துக்களை அமைக்கவேண்டியிருக்கிறது என்பதை நன்றாகச் சிந்திக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். அன்றைய நிலையில் ஒவ்வொரு கிராமங்களுக்கும் என்ன என்ன தேவையோ, என்ன என்ன வழியில் செயல் பட்டால் கிராமங்கள் பலதுறைளிலும் முன்னேறுமோ அந்த அந்த வழியில் Trade, education, irrigation, agriculture, etc , செயல்பட்டிருக்கின்றன. அந்த மாதிரியான முறையில் அமைய வேண்டும் என்பதற்குத்தான் காந்திஜி அவர்கள் கூட ராம ராஜ்யம் என்பதைப்பற்றி சொல்லும்போது "It is complete a republic independent of its neighbours for its own vital wants" என்று ஒரு குறிப்பிலே சொல்கிறார். கிராமங்கள் சுதந்தரமாக யூனிட்டாக இருக்கவேண்டும். தன் சுயதேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள மற்றவர்களை எதிர்பார்க்கக் கூடாது. பிறரை நம்பி வாழாத நிலைமையில் அடிப்படையில் அமைய வேண்டும் என்று சொல்கிறார். அப்படிப்பட்ட கிராம பஞ்சாயத்து யூனியன்களையே அமைக்க வேண்டுமென்று வலியுறுத்திச் சொல்ல ஆசைப்படுகிறேன். இதன் கருத்தே "self-governing," self-sufficient என்பது தான். இதைப்பற்றி அரசியல் அமைப்பில் ஆர்டிகிள்—40-லும் "The State shall take steps to organise village panchayats and endow them with such powers and authority as may be necessary to enable them to function as units of self-government." என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஆகையால் ஒவ்வொரு பஞ்சாயத்தும் இன்றைக்கு இரண்டு வகையில் செயல்பட வேண்டிய நிலையில் திட்டங்களை வகுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. முதலாவதாக கிராமத்தின் அடிப்படையான தேவையாகிய உணவை அதிகமாக உற்பத்தி செய்து கொள்வதற்கு திட்டங்களை வகுப்பது முதல் கடமையாக இருக்கவேண்டும். அடுத்து Social Functions ட்ரெய்னேஜ், பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி முதலியவற்றைச் செய்து கொடுக்க வேண்டிய கடமை இருக்கிறது. இந்த இரண்டு கடமையிலும் முதல் கடமையாகக் கொள்ள வேண்டியது உணவு உற்பத்தியைத்தான். மக்களுடைய பொருளாதார வாழ்வை பாதிக்கும்படியாக விடாத வகையில் பல திட்டங்களைப் போடுவது தான். அந்த அடிப்படையை வைத்துக் கொண்டு இந்தப் பஞ்சாயத்து சட்டத்தைப் பார்த்தால் சிறிது ஏமாற்றம் அடையக் கூடிய நிலைமையில் தான் இருக்கிறோம். இது யாவரும் அறிந்த உண்மை. முன்னரே பேசியவர்களும் இதைப்பற்றிச் சொன்னூர்கள். அவ்வாறு அதிகாரத்தைக் கொடுப்பது என்றால் மக்கள் இன்னும் அவ்வளவு பக்குவம் அடையவில்லை என்று சொல்லலாம். அது சரியான வாதம் ஆகாது. நாமே அவர்களால் அதைச் செய்ய முடியாது, இதைச் செய்ய முடியாது என்று அவநம்பிக்கை கொள்வது சரியல்ல. அது நம்முடைய ஜனநாயக வெற்றிக்கு உதவக் கூடியதல்ல. இன்றைக்கு இந்தச் சட்டத்தின் மூலமாக நாம் சோஷியல் பங்ஷன் என்பதான இரண்டாவதான

23rd September 1958] [Sri K. Ramachandran]

கடமைக்கே முதலிடம் கொடுத்து பஞ்சாயத்து யூனியன்களை அமைக்கிறோம். Decentralisation of Powers என்கிற முறையில் அதிகாரங்கள் பரவலாக விநியோகிக்கப்பட வேண்டுமென்ற அடிப்படையில் இதைக் கொண்டு வந்திருக்கிறோம் என்பது உண்மை. அந்த முறையில் இந்த மசோதா அமைந்திருக்கிறதா என்று பார்த்தால், இல்லை என்று தான் நான் வருத்தத்துடன் சொல்லவேண்டியிருக்கிறது. அதிகாரங்கள் " டீஸெண்ட்ரலைஸ் " பண்ணப்பட்டிருக்கின்றனவா என்று பார்க்கும்போது, ஒரு " நெட்வொர்க் ஆப் ஆபீஸர்ஸ் " போன்ற ஏற்பாட்டிற்குத்தான் மசோதா வகை செய்கிறது என்று தெரிகிறது. அதாவது, ஆரம்பத்தி லிருந்து கடைசி வரையில் அதிகாரிகளைக் கொண்டு காரியங்களைச் செய்வதற் கான ஏற்பாடுதான் காணப்படுகிறது. சர்க்கார் ஒவ்வொரு கட்டத்திலும் அதிகாரிகளின் மூலம் தங்கள் பிடியை வைத்துக்கொள்வதற்கான ஏற்பாட்டைச் செய்திருக்கிறார்கள். அடித்தளத்தில், எக்ஸிக்யூடிவ் ஆபீஸரின் மூலமும், கமிஷனரின் மூலமும் பிடி வைத்துக் கொள்ள முடியும்; அதற்கு மேல், இன்ஸ்பெக்டர் ஆப் லோகல் போர்ட்ஸ் மூலமும் கலெக்ட ரின் மூலமும் பிடி வைத்துக்கொள்ளமுடியும். மசோதாவின் 43-44-வது பிரிவுகளைப் பார்த்தால், பஞ்சாயத்து போர்டு பிரஸிடெண்டுகளுக்கும் பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில் சேர்மன்களுக்கும் என்ன அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்று தெரியும். 1951-ம் வருஷத்திய பஞ்சாயத்துச் சட்டத்தில் அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள் தான் இப்போதும் அவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. அதாவது, பஞ்சாயத்து ப்ரெஸிடெண்டுக்கும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் சேர்மனுக்கும், சபையைக் கூட்டுவதற்கும் தீர்மானங்கள் போடுவதற்கும்தான் அதிகாரங் கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அத் தீர்மானங்களை நிறைவேற்றுவதற் குரிய அதிகாரங்கள் எக்ஸிக்யூடிவ் ஆபீஸருக்கும் கமிஷனருக்கும்தான் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த அம்சத்தைப் பொறுத்தவரையில், முந்தைய சட்டத்திற்கும் இந்த மசோதாவிற்கும் எந்த விதமான வித்தி யாசமும் இல்லை. பஞ்சாயத்து சபைகளின் தீர்மானங்கள் எல்லாம் அமல் நடத்தப்படுமா என்பது குறித்தும் சந்தேகம் ஏற்படுகிறது. அவைகள் எல்லாம் நிச்சயமாக அமுலுக்குக் கொண்டுவரப்படும் என்று சொல்வதற் கில்லை. தீர்மானம் சரியானதல்ல என்று இன்ஸ்பெக்டர் ஆப் லோகல் போர்ட்ஸ் அபிப்பிராயப்பட்டால் அது ரத்து செய்யப்படலாம்—அது அமுலுக்குக் கொண்டுவரப்பட வேண்டியதில்லை—என்று 147-வது பிரிவு கூறுகிறது. ஆகவே, மசோதாவில் தீர்மானங்களையும் திட்டங்களையும் நிறை வேற்றுவதற்குரிய அதிகாரங்கள் எக்ஸிக்யூடிவ் ஆபீசர்களுக்கும் கமிஷனர் களுக்கும் கொடுக்கப்பட்டிருக்கின்றனவே யொழிய ப்ரெஸிடெண்டுகளுக்கும் சேர்மன்களுக்கும் கொடுக்கப்படவில்லை. மேலும், தேசிய விஸ்தரிப்புத் திட்டங்களைப் பொறுத்தவரையில், பஞ்சாயத்துக் கவுன்சில், அது விரும்பி னால், சில சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு தேசிய அபிவிருத்தி திட்ட வேலைகளை எடுத்து நடத்தலாம் என்று மசோதாவில் குறிப்பிடப்பட்டிருக் கிறது. ஆனால், பஞ்சாயத்துக் கவுன்சில்தான் இந்த வேலைகளை எடுத்து நடத்தும் ஏஜென்ஸியாக இருக்கவேண்டுமென்று நான் விரும்புகிறேன். அவ் வேலைகளை சர்க்கார் கிராமப் பஞ்சாயத்துக்களின் மூலமே செய்ய வேண்டும். அதற்கேற்றவாறு மசோதாவில் விதிகளை வகுக்கவேண்டும். அத்திட்டங்கள் கிராமப் பஞ்சாயத்துக்களின் மூலம் நிறைவேற்றப்பட்டால் தான் அத்திட்டங்களின் பயனை சாதாரண கிராம விவசாயி அடையமுடியும். இப்போது அதை சாதாரண கிராம விவசாயி அடைய முடிவதில்லை. ஏனென்றால், அத்திட்டங்கள் கிராம மக்களிடம் போய்ச் சேருவதற்கு அவை வெகு தூரம் பிரயாணம் செய்ய வேண்டியிருக்கிறது. எனவே, கிராம அபிவிருத்தி திட்டங்கள் பஞ்சாயத்துக் கவுன்ஸில்கள் மூலம்தான் நடத்தப் படவேண்டும். அப்போதுதான், கொஞ்சநஞ்சமாவது அபிவிருத்தி திட்டங் களால் கிராம மக்கள் பயனடைய முடியும். 10-30 a.m.

அடுத்தபடியாக, நான் ஏற்கனவே சொன்னதுபோல், இந்த மசோதாப் படி, அவசர காலங்களில் நடவடிக்கைகள் எடுக்கும்போது இந்த சபைகளில் தலைவர்களுடனே உறுப்பினர்களுடனே கலந்தாலோசிக்க வேண்டிய நிர்ப்பந் தத்தில் கமிஷனர்களோ எக்ஸிக்யூடிவ் ஆபீஸர்களோ இல்லை; அவர்கள்

நடவடிக்கைகள் எடுத்துவிட்டு, பின்னர் அதை கவுன்சிலுக்குத் தெரிவித்தால் போதும். அவசர காலங்களிலும் சரி, மற்ற காலங்களிலும் சரி, எப்போதுமே. நடவடிக்கைகள் எடுப்பதற்கான அதிகாரம் ப்ரெஸிடெண்டுக்கும் சேர்மனுக்குமதான் இருக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். அவர்களுடைய உத்தரவுகளேயும், அவர்கள் குறிப்பிடும் நடவடிக்கைகளேயும் நிறைவேற்றுபவர்களாகத்தான் எக்ஸிக்யூடிவ் ஆபீசரும் கமிஷணரும் இருக்க வேண்டும். அவர்களுடைய காரியதரிசிகள் போலத்தான் எக்ஸிக்யூடிவ் ஆபீசரும் கமிஷணரும் இருக்க வேண்டுமென்ற கருத்தை வலியுறுத்துகிறேன்.

வழக்குகளேத் தீர்த்துவைப்பதில் நமது நாட்டு கிராமம் பஞ்சாயத்துகள் ரொம்பவும் சேவை புரிந்திருக்கின்றன என்பதற்கான சரித்திர ஆதாரங்களே நாம் காண்கிரேம். இந்த மசோதாவில், வழக்குகளேத் தீர்த்துவைப்பதற்கான அதிகாரங்களும் அவைகளுக்குக் கொடுக்கப்படவில்லே. கிராமப் பஞ்சாயத்துக்களில் கோர்ட்டுகள் இல்லாவிட்டால், வழக்குகளில் சம்பந்தப்பட்ட கிராம மக்கள் நீதி பெறுவதற்காக வெகு தூரத்தில் இருக்கும் கோர்ட்டுகள் உள்ள இடங்களுக்கு பிராயாணம் செய்ய வேண்டியிருக்கும். இதன் காரணமாக அவர்கள் நீதி பெறுவதற்கு அதிகம் செலவு செய்ய வேண்டியிருக்கும். அவர்களுக்கு குறைந்த செலவில் நீதி கிடைப்பதற்கு வகை செய்வதற்காக கிராமப் பஞ்சாயத்துக்களே ஏற்படுத்துவதற்கு மசோதாவில் வகை செய்யவேண்டும். நான்கு-ஐந்து கிராமப் பஞ்சாயத்துகளுக்கு ஒரு கோர்ட் வீதமாவது பஞ்சாயத்துக் கோர்ட்களே ஏற்படுத்த வேண்டும்.

" லான்ட் ரெவின்யூ "-வைப் பொறுத்தவறையிலும் தலேக்கு ஒரு ரூபாய் கொடுக்கவேண்டும் என்று மசோதாவில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அளவு போதாது. இந்தத் தொகையை அதிகரிக்க வேண்டும். மேலும் கம்மர்ஷியல் டாக்ஸையும் விவசாயி கொடுக்க வேண்டும். கல்வித் திட்டங்களுக்காக பஞ்சாயத்துகளுக்கு அதிகம் பணம் கொடுக்கப்பட்டிருக்கிறது எல்லா பஞ்சாயத்துகளிலும் போதிய பள்ளிகளே ஏற்படுத்தி பிள்ளேகளுக்கு கட்டாயக் கல்வி அளிப்பதற்கு வகை செய்ய வேண்டும். " டார்கெட் " தேதியாகிய 1961-ம் வருட அக்டோபர் மாதம் 2-ம் தேதிக்குள் எல்லா இடங்களிலும் ப்ளாக் அபிவிருத்தித் திட்டங்களேக் கொண்டுவர வேண்டும் என்று சொல்லிக் கொள்கிறேன்.

இப்போது இயற்றப்படும் சட்டம் ஒரு உருவம் (பார்ம்) தான் என்றும். இதில் உயிர் இல்லே என்றும், நான் ஏற்கனவே சொன்னதுபோல் உணவுப் பொருள் உற்பத்தி சம்பந்தப்பட்ட அதிகாரங்களே பஞ்சாயத்திடம் ஒப்படைத்தால்தான் சட்டத்திற்கு உயிர் வரும் என்றும் அதுவரையில் இது ஒரு உயிரில்லாத கூடாகத்தான் இருக்கும் என்றும் சொல்லிக்கொள்கிறேன். இத்துடன் என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

**DR. (SRIMATHI) T. S. SOUNDARAM RAMACHANDRAN :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, எல்லாக் கட்சிகளின் பிரமுகர்களின் ஆலோசனைகளேயும் கேட்டுக்கொண்டு இந்த நல்ல மசோதாவை உருவாக்கி இதை இங்கே கொண்டுவந்திருக்கும் சர்க்காருக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். எவ்வளவு நல்ல முறையில் சட்டங்களே இயற்றினுலும், பிறகு அவைகளே நல்ல முறையில் அமல் நடத்தவேண்டியது மிகவும் முக்கியம். ஜனநாயகப் பாதையில் சட்டம் செய்ய வேண்டும். அதில் கொஞ்சம் கஷ்டம் இருந்தாலும் ஜனநாயகத்தை நோக்கியே சட்டம் செல்லவேண்டும். அப்படியில்லாவிட்டால் நிர்வாக அதிகாரிகள் மக்களிடையே பயத்துடன் பணியாற்ற வேண்டியிருக்கும். அதற்கு இடமில்லாத முறையில் விதிகளே வகுக்க வேண்டும். இப்போதுள்ள பஞ்சாயத்துக்கள் அமைப்பில், ஜனநாயகம் இல்லே. இயற்றப்படும் சட்டம் ஜனநாயகத்தை நோக்கிச் செல்லக்கூடிய முறையில், விதிகள் வகுக்கப்படாவிட்டால், புதிய பஞ்சாயத்துக்கள் அமைப்பில் ஜனநாயகம் இன்னும் குறைந்துவிடுமோ என்று அஞ்சுகிறேன். அந்த அச்சத்திற்கு இடமில்லாத வகையில் விதிகள் வகுக்கப்பட வேண்டும் என்று சொல்லிக் கொள்கிறேன். இந்த மசோதா ஒரு லட்சிய மசோதா என்று நான்

23rd September 1958]
[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

சொல்ல மாட்டேன். ஆனால், இந்த மசோதாவைக் கொண்டுவந்ததன் மூலம் ஜனநாயகப் பாதையில் துணிச்சலாகச் செல்ல அடி எடுத்து வைக்கிறோம் என்று பெருமையுடன் சொல்லிக் கொள்வேன்.

இந்த மசோதாவில், பெண்களுக்கும் ஹரிஜன மக்களுக்கும் பஞ்சாயத்து சபைகளில் பிரதிநிதித்துவம் அளிப்பது சம்பந்தப்பட்ட விதியைப்பற்றி ஒரு கனம் அங்கத்தினர் பேசினார், ஸ்திரீகள் முன்னேற்றத்தைப் பற்றி நாம் எவ்வளவுதான் பேசினாலும், ஸ்திரீகள் முன்னேற்றம் குறித்து சகோதரர்களுக்கு எதிர்ப்பு மனப்பான்மை இல்லாவிட்டாலும், இந்த மசோதாவைக் குறித்து விவாதிக்கும்போது பஞ்சாயத்து சபைகளில் பெண்களுக்கு 10 சத விகிதம் பிரதிநிதித்துவம் கொடுத்தால் போதுமா அல்லது 15 சத விகிதம் பிரதிநிதித்துவம் கொடுத்தால் போதுமா என்று ஆலோசனை செய்யும் நிலையில் சகோதரர்கள் இருக்கிறார்கள். இது மிகவும் வருந்தத்தக்கது. பெண்களுக்கு இந்த சபைகளில் 50 சத விகிதம் சரி பாதி—பிரதிநிதித்துவம் கிடைக்க வேண்டும். அதற்கு சட்டத்தில் வகை செய்ய வேண்டாம். சமூகம் அதற்கு ஒத்துழைக்க வேண்டும். என் போன்றவர்கள் சட்டசபையிலோ பார்லிமெண்டிலோ மெம்பராக ஆவதுபற்றி கவலைப் படுவதில்லை. கிராமங்களில் ஸ்திரீகள் தங்கள் குடும்பங்களை கவனித்துக் கொள்வதுடன் கிராம நிர்வாகத்திலும் கட்டாயம் பங்கெடுத்துக் கொள்ள வேண்டும். கிராம நிர்வாகத்தில் பங்கெடுத்துக் கொள்ள முன்வர வேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்தில் சகோதரிகளைக் கேட்டுக் கொள்கிறேன். அத்துடன், தேர்தல் காலத்தில், ஸ்திரிகளுக்கு இந்த சபைகளில் சரிபாதி பிரதிநிதித்துவம் கிடைக்கச் செய்யும் முறையில் சகோதரிகளுக்குப் பக்க பலமாக இருக்க வேண்டுமென்று சகோதரர்களைக் கேட்டுக் கொள்கிறேன். மற்ற சபைகளில் இருந்து சமூகத்திற்கு ஸ்திரீகள் சேவைபுரிய வேண்டுமானால், அவர்கள் வீட்டை விட்டு வெளியே போகவேண்டியிருக்கிறது ; அவர்கள் குடும்பத்தை கவனிக்க முடியாது. கிராமப் பஞ்சாயத்துக்களைப் பொருத்தவரையில். அவர்கள் தங்கள் குடும்பங்களை கவனித்துக் கொண்டே ஊர் நிர்வாகத்தில் பங்கு கொள்ள முடியும். எனவே கிராமப் பஞ்சாயத்துக்கள் தான் சமூக சேவைக்கு ஸ்திரீகளுக்கு மிகவும் ஏற்ற ஸ்தாபனங்கள். அவர்கள் இந்த சபைகளில் போதிய பிரதிநிதித்துவம் பெறுவதற்கு சகோதர சமுதாயம் விட்டுக் கொடுக்க வேண்டும் என்று சொல்லிக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கல்விக்காக கிராமப் பஞ்சாயத்துகளுக்கு கணிசமான தொகை ஒதுக்குவதற்கு மசோதாவில் வகை செய்யப்பட்டிருக்கிறது. 11 வயது வரையிலுள்ள குழந்தைகளில் 98 சத விகிதத்தினருக்காவது கட்டாயக் கல்வி அளிப்பதற்குத் திட்டமிட்டிருக்கிறோம். 1961-ம் வருஷத்திற்குள் அத் திட்டத்தை அமலுக்குக் கொண்டுவர விரும்புகிறோம். அவ்வாறு செய்யும்போது, 40 சத விகித பெண்களுக்காவது கல்வி 10-40 a.m.
கிடைக்கச் செய்யவேண்டும். ஆகவே பெண் குழந்தைகள் அதிகமாக பள்ளிக்கூடங்களுக்கு வரச் செய்ய ஊக்கம் அளிக்க, "இன்ஸென்டிவ்" அளிக்க, இந்தப் பணம் போதுமா, போதுமான முறையில் செய்யப்படுமா என்பதை கவனிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். நிதிகள் ஒதுக்குகிற விஷயத்தில் அதிகம் பணம் கிடைக்க புது வரிகள் போடுவதில்லை, ராஜ்ய அளவிலே என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. வரி என்று சொன்னால் வேண்டாம் என்றும், சலுகைகள் என்று சொன்னால் வேண்டுமென்றும் சொல்லக் கூடிய முறையில்தான் ஜனங்களில் மனப்பான்மை இருக்கிறது. ஆனால் கிராமங்களில் வருவாயை எந்த முறைகளில் எல்லாம் பெருக்கிக் கொள்ளலாம், எப்படி தங்களுக்குத் தாங்களே தங்கள் காரியங்களை நிறைவேற்றிக் கொள்ளலாம், அதாவது அவர்களின் "ரிசோர்ஸ்ஸ்" -ஐ பெருக்கிக் கொள்ள திட்டமிடும் முறையில் பஞ்சாயத்துக்களை அமுல் நடத்தும்படி நிர்வாகிகள் பார்த்துக் கொள்ள வேண்டும். கிராம முன்னேற்றம் வரவேண்டுமானால் கிராமங்களில் எதிர்காலம் சமுதாய நலத் திட்டங்களைப் பொறுத்திருக்கிறது என்று சொல்கிறோம்.

[23rd September 1958
[Dr. (Srimathi) T. S. Soundaram Ramachandran]

உண்மையில் நம்புகிறோம். அப்படியிருக்கும்போது, பஞ்சாயத்து கௌன்ஸில், பஞ்சாயத்துகளில் அனுமதியைப் பெற்றுத்தான் சமுதாய நலத் திட்டங்களை பஞ்சாயத்து கௌன்சிலிடம் ஒப்படைக்கலாம், " may entrust " என்று இருக்கிறது. அது, மாறவேண்டும். நாடு நலம் பெற வேண்டுமானால் பஞ்சாயத்துகளும், பஞ்சாயத்து கவுன்சில்களுந்தான் கிராமங்களில் நடக்கக்கூடிய சகல அபிவிருத்தித் திட்டங்களுக்கும் உத்திரவாதம் இருக்கவேண்டும். அவர்களின் அனுமதியின் பேரில் என்று சொல்லப் பட்டிருக்கிறது. அது கூடாது. பஞ்சாயத்துக்களின் தலைப்பொறுப்பாகத்தான், " நீர்பாசனத் திட்டங்கள், சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள், கால்நடை அபிவிருத்தி, கிராமக் கைத்தொழில்கள் " போன்றவைகள் நூற்றுக்கு நூறு பஞ்சாயத்துக் கவுன்ஸில்களில் தலைச்சுவையாக, அவர்களின் முழுப் பொறுப்பாக இருக்கவேண்டும். அதற்கு, சர்க்கார் அவர்களுக்கு உதவியாக இருக்க வேண்டும். சர்க்காரே அந்தச் திட்டங்களை நடத்திக் கொண்டு போனால், அல்லது பஞ்சாயத்து ஏற்க முன் வருகிற திட்டங்களை அவர்களுக்கு கொடுத்து விட்டு மற்றவைகளை சர்க்கார் நடத்தினால் இரட்டை ஆட்சி மனப்பான்மைதான் ஏற்படும். தங்களின் பொறுப்புக்களை பஞ்சாயத்து கவுன்ஸில்கள் தட்டிக் கழிக்க முன்வரலாம். ஆகவே, சமுதாய நலத் திட்டங்களை அமுலுக்குக் கொண்டு வந்து கிராமச் சீரமைப்பிற்காக பாடு பட பஞ்சாயத்துக்களுக்கும் பஞ்சாயத்து கவுன்ஸில்களுக்கும் பரிபூர்ண உரிமை மட்டுமல்ல, அதை அவர்களின் கடமையாக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். பஞ்சாயத்து அட்மினிஸ்ட்ரேஷனில் இப்பொழுது அதிகமான பஞ்சாயத்துகளும், பஞ்சாயத்து கௌன்ஸில்களும் இல்லை. அப்படியிருக்கும்போது பஞ்சாயத்து நிர்வாகத்தில் தவிர்க்கக் கூடிய தேக்கங்கள், அதிகம் இருக்கிறது என்று சட்டசபையிலும் வெளியிலும் அடிக்கடி புகார்கள் வந்து கொண்டிருக்கிறது. அப்படியிருக்கும்போது நாடு முழுவதும், பஞ்சாயத்துகளும், பஞ்சாயத்து கவுன்ஸில்களும் அமையும்போது இப்படிப்பட்ட தேக்கங்கள் தவிர்க்கப் படாவிட்டால், தேக்கம் அதிகரித்துக் கொண்டே போனால் வேலைகள் நன்கு நடப்பதற்கு பதில் நிராசைதான் ஏற்படும். ஆகவே, அதற்கு வழி செய்து கொடுக்கவேண்டியது, தேக்கங்களை தவிர்க்க வழி செய்து கொடுக்க வேண்டியது. அரசாங்கத்தின் கடமையாகும். தேக்கத்தை எப்படி போக்கலாம் என்றால், ஸ்தலத்தில் வைத்தே சிக்கல்களைத் தீர்த்து தேக்கங்களை துரிதப் படுத்தலாம். நேற்று பிற்பகல் நடந்த கூட்டத்தில் கூட மைனர் பஞ்சாயத்து என்று சொல்கிற கிராம பஞ்சாயத்துகளில் எக்ஸிக்யூடிவ் ஆபீஸர் வேண்டாம், பஞ்சாயத்து தலைவரே எல்லாவற்றையும் செய்ய வேண்டுமென்று துணிச்சலோடு அந்த அதிகாரத்தை கொடுக்கவேண்டுமென்று பலரும் சொன்னார்கள். நானும் அதை ஒப்புக் கொள்கிறேன். ஆனால் நிதி நிர்வாகம் ஊழலாக நடக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும். தணிக்கை செய்து அந்த கணக்குகளை உடனுக்குடன் பஞ்சாயத்திற்கு அனுப்பி, தவறுகள், இருந்தால் அதை சரிப்படுத்தியமைக்க ஏற்பாடு செய்யாவிட்டால் ஜனநாயகத்தின் பேரில் குற்றம் சொல்ல காரணமேயில்லை. அதற்கு அரசாங்கமும் துணை புரிய வேண்டும்.

DEPUTY SPEAKER : The hon. Member's time is up.

*SRI M. P. PERIASAMI : கனம் உதவி தலைவர் அவர்களே இந்த கிராம பஞ்சாயத்து மசோதாவை நான் முழு மனதுடன் ஆதரிக்கிறேன். ஏனெனில், நீண்ட காலமாக வெள்ளையன் ஆட்சியில் ஜில்லா போர்ட், தாலுகா போர்ட், மேஜர் பஞ்சாயத்து என்றெல்லாம் பிரித்து வைத்திருந்தார்கள். அப்படி எதற்காக வைத்துக் கொண்டிருந்தார்கள் என்றால், பஞ்சாயத்துகளின் வரிகளை போட்டு அந்த ஊரில் சில காரியங்களை செய்து விட்டு மீதியை ஜில்லாக்களுக்கும், மாகாணத்திற்கும் கொண்டு வந்து செலவு செய்து விட்டு, மீதிப் பணத்தை வைத்துக் கொண்டு தேசத்திற்கு உதவி செய்து கொண்டு வந்தார்கள், வெள்ளையன் ஆட்சி வரையில். பிறகு காந்திஜி அவர்கள் கிராம சுயாட்சி வேண்டுமென்று

எண்ணினர். காங்கிரஸ் பிரமுகர்களும் மற்றவர்களும் அதற்கு உடந்தையாக இருந்தார்கள். முதலில் இந்தியாவிற்கு சுதந்திரம் வேண்டுமென சொன்னதின் அடிப்படையில், கிராமங்களுக்கும் சுதந்திரம் வேண்டுமென்று எண்ணி அரசாங்கம் இப்பொழுது கிராமப் பஞ்சாயத்து மசோதாவைக் கொண்டு வந்திருக்கிறார்கள். கிராமப் பஞ்சாயத்துக்களுக்கும், மேஜர் பஞ்சாயத்துகளுக்கு முன்பு எவ்வளவு அதிகாரங்கள் இருந்ததோ அதை விட கூடுதலாக அதிகாரங்கள் இப்பொழுது கொடுக்கப் பட்டிருக்கிறது. மேஜர் பஞ்சாயத்து, மைனர் பஞ்சாயத்து, இவைகள் சில சில கிராமங்களில்தான் இருந்து கொண்டு வந்தது. சின்னச் சின்ன குக் கிராமங்களில் கூட இப்பொழுது அதிகாரம் கொடுக்கப் பட்டிருக்கிறது. அங்கு வசூலிக்கக் கூடிய பணத்தை கூடுமானவரையில் அக்கிராமங்களிலேயே செலவு செய்து விட்டு மீதிப் பணத்தை எந்த வழியில் செலவு செய்யலாம் என்பதைப் பற்றி ஆலோசித்து செய்ய அரசாங்கம் ஒரு "பண்ட்" வைத்திருக்கிறார்கள். கிராமங்களில் உள்ள திட்டங்களுக்கும் பணம் போதாவிட்டால் அரசாங்கம் பணம் கொடுத்து உதவுகிறது. 1938, 1940, 1945-ம் வருடங்களில் கிராமங்களிற்குள்ளே நுழையவே முடியாது. இப்பொழுது, ரோடு வசதி, கிணறு வசதி, பாசன வசதி போன்றவைகள் செய்து தரப்படுகிறது. தண்ணீர் டாங்குகள் கட்டப்படுகிறது. சில இடங்களில் இன்னும் பஞ்சாயத்துகள் ஏற்படவே இல்லை. பஞ்சாயத்துகள் ஏற்படாத ஊர்களில், தப்பபிப்பிராயத்தை ஏற்படுத்தும் முறையில் பிரசாரங்கள் செய்யப்படுகிறது. கிராமப் பஞ்சாயத்து வந்தால் வீட்டுவரியும் மற்ற வரிகளும் விதிப்பார்கள், ஆகவே, பஞ்சாயத்துகள் தேவையில்லை என்று பெரிய வீடுகள் கட்டியிருப்பவர்களும், பணக்காரர்களும் கிராமங்களில் இன்னும் பொது மக்களை ஏமாற்றிக் கொண்டு வருகிறார்கள். அவர்களுக்கு வீட்டு வரி அதிகமாகி விடுமே என்று பயந்து ஏழை எளியவர்களிடம் குடிசையில் வாழ்வோர்களுக்கும் வரி போடுவார்கள், ஆகவே, கிராமப் பஞ்சாயத்துகள் வேண்டியதில்லை என்று சில பணக்காரர்கள் இன்னும் சில கிராமங்களில் கூறிக் கொண்டு வருகிறார்கள். வேண்டாம் என்று மனுக்கள் அனுப்புகிறார்கள். பஞ்சாயத்து ஏற்படாத கிராமங்களில், ஐந்தாண்டுத்திட்டம் கீழ் செய்யப் படவேண்டியவேலைகள் ஒன்றுமே செய்யப்படவில்லை. ஐந்தாண்டுத்திட்டத்தில் பலன் ஒன்றும் பஞ்சாயத்து ஏற்படாத கிராமங்களுக்கு கிடைக்கவில்லை. கிராமப் பஞ்சாயத்து உள்ள இடங்களில் தண்ணீர் தொட்டிகள், பெரிய திட்டங்கள் இவைகளை எல்லாம் போட்டு அவர்கள் நன்மை அடைகிறார்கள். பஞ்சாயத்து இல்லாத இடங்களில் உள்ள பாமர மக்கள் அரசாங்கத்தைத்தான் குறை கூறி பிரசாரம் செய்து வருகிறார்கள்.

எப்படி டௌன்களுக்கும், தாலூக்காக்களுக்கும் நன்மைகள் கிடைக்கிறதோ அதே மாதிரி கிராமங்களுக்கு எல்லாம் வசதி செய்யப்பட்டிருக்கின்றன. போக்குவரத்து வசதி, குடி தண்ணீர் வசதி, மற்றும் இது போன்ற வசதிகள் எல்லாம் மேலும் செய்து கொடுப்பதற்கு இந்த சமயத்தில் இந்த சட்டம் கொண்டுவரப்பட்டிருக்கிறது என்பதை நாம் உணர்ந்து நாம் எல்லோரும். அதாவது எல்லா கட்சிகளும், எந்தவிதமான அபிப்பிராய பேதங்கள் இருந்தாலும், இந்த சட்டத்தை எல்லோரும் முழு மனதோடு ஆதரிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அப்படி கொண்டு வந்தால் நம்முடைய கிராம மக்கள் நிரந்தரமாக நல்ல வாழ்க்கை நடத்த முடியும். அதல்லாமல் இந்த சட்டம் உளுத்துப்போன சட்டம், இதன் மூலம் எந்த விதமான பலமும் ஏற்படாது என்று நாம் சொல்லிக் கொண்டிருப்போமானால், நாம் சொல்லக்கூடிய வார்த்தைகளை நம்பி கிராம மக்கள் பாழடைந்து விடுவார்கள். ஆகவே இந்த பில்லில், பல குறைகளும் இருக்கலாம். இந்த சட்டம் நடைமுறைக்கு வருகின்ற சமயத்தில் பல குற்றங்கள் ஏற்படலாம். அவைகளை எல்லாம் அந்தந்த சமயத்தில் நிவர்த்தி செய்து கொள்ளலாம். தீண்டாமை சட்டம் கொண்டு வந்து 10, 15 வருடங்கள் ஆகியும்கூட அதில் பலவிதமான குறைகள் இருந்து வந்தன. பல சமயங்களில் அதற்கு பலனில்லாத வகையில் அந்த சட்டம் இருந்து வந்தது. அதற்கு பிறகு அவைகளை எல்லாம் வருஷத்திற்கு வருஷம் சட்டத்தை

10–50 a.m.

தகுந்தவாறு திருத்திக்கொண்டு வந்தார்கள். இப்போது சொல்லப்படும் பஞ்சாயத்துக்களிலும் பஞ்சாயத் யூனியனிலும் பல குறைகள் வரலாம். அவைகளை எல்லாம் காலாகாலத்தில் என்னென்ன குறைகள் ஏற்படுகின்றதோ அந்த குறைகளை எல்லாம் அந்த சமயத்தில் திருத்துவதற்கு அரசாங்கம் முன்னுக்கு வரும் என்று நாம் நம்பலாம். அதற்கு தகுந்த மாதிரி நாம் சட்டங்களை திருத்திக்கொள்ளலாம். பிறகு இந்த பஞ்சாயத் திருத்த மசோதா இன்று முக்கியமான அம்சமாக விளங்குகிறது. அதிலும் குறிப்பாக இப்போது இருக்கிற வாத்தியாயர்களுக்கு கஷ்டம் ஏற்படும் என்று சிலர் நினைக்கிறார்கள். பஞ்சாயத்தில் இருக்கின்ற வாத்தியார்களை அந்தந்த யூனியனுக்கு மாற்றி விடுகிறார்கள். அப்போது யார் அந்த யூனியன் பிரெசிடெண்டோ அவர்களுக்கு தகுந்த முறையில் நடக்காவிட்டால் இந்த வாத்தியாயர்களுக்கு என்ன நிலை ஏற்படுமோ என்று அவர்கள் பயப்படுகிறார்கள். ஆகவே இதற்கு அரசாங்கமும் தகுந்த முறையில் ஏதேனும் ஒரு வழியை ஏற்படுத்தவேண்டும். இவ்விதம் மாற்றப்படும் பொழுது இந்த வாத்தியாயர்களுக்கு எந்தவிதமான கஷ்டமும் ஏற்படாமல் இந்த விஷயத்தை அரசாங்கம் கவனித்து அதற்கு தகுந்த முறையில் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஜில்லா போர்டு மெம்பர்கள் 40, 45 என்று இருந்தும் இப்போது நடக்கக்கூடிய ஜில்லா அட்வைஸரி கமிட்டியில் 70, 80 பேர்கள் கமிட்டி மெம்பர்களாக இருக்கிறார்கள். இந்த கமிட்டியில் ஒரு மணி நேரம் அல்லது இரண்டு மணி நேரம் வாக்குவாதம் நடைபெறும். மக்களுக்கு வேண்டிய காரியங்கள் ஒன்றும் அங்கு நடக்காது. வந்தவர்கள் எல்லாம் டி.எ.யும் வாங்கிக் கொண்டு போகக் கூடிய நிலையில் தான் இருந்து கொண்டிருக்கிறது தகுந்த முறையில் மக்களுடைய குறைகளை எல்லாம் எடுத்துக்கொள்வதற்கு அங்கு இடம் கிடைப்பதில்லை. இந்த விஷயம் நம் எல்லோருக்கும் தெரிந்ததுதான். இதில் பஞ் ாயத்துகளில் கொஞ்சம் அதிகமாக செலவு ஏற்பட்டபோதிலும் அவர்களுக்கு தகுந்த முறையில் அதிகாரங்களை கொடுக்கவேண்டும். சிலர் பஞ்சாயத்து போர்டு தலைவர்களாகவும் வரலாம், ஜில்லா வாரியாக அமைக்கப்படுகிற போர்டுகளிலும் தலைவர்களாக வரலாம். இதில் சாதாரணமாக சிலர் பணங்களை கையாடுகிறார்கள். இவ்விதமெல்லாம் இதில் வந்து சேருகின்றன. இதை கண்காணிப்பதற்கு எக்ஸிக்யூடிவ் அதிகாரிகளை போட்டு தகுந்த முறையில் நடவடிக்கை எடுக்கவேண்டும். அதோடு இதற்கு தகுந்த முறையில் ஜாமீன் வாங்கி கொண்டுதான் இந்த மாதிரியான தலைவர் பதவிகளுக்கு பொருப்பு கொடுக்கவேண்டும். அவ்விதமிருந்தால் பொது மக்களின் பணத்திற்கு சேதம் ஏற்படாது என்பதை தெரிவித்துக் கொண்டு இந்த பஞ்சாயத்து மசோதாவை எல்லாக் கட்சிக்காரர்களும் இந்த சமயத்தில் கிராம சுயராஜ்யம் கிடைப்பதற்கு இது வழியாகும் என்ற முறையில் எல்லோரும் இதை ஆதரிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

**SRI M. P. SUBRAMANIAM :** சட்டமன்றத் துணை தலைவர் அவர்களே, இப்போது விவாதத்தில் இருக்கும் இந்த பஞ்சாயத்து மசோதாவில் பஞ்சாயத்துகளைப்பற்றியும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களைப்பற்றியும் அவைகளின் அமைப்பு முறைகளைப்பற்றியும் அவைகளின் அதிகாரங்களைப்பற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்துகளைப்பற்றிய சட்டம் ஏற்கெனவேயே இந்த மாநிலத்தில் இருந்து வருகிறது. பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில் முறைகள் நம்முடைய மாநிலத்திற்கு மட்டுமல்லாமல் இந்தியா முழுமைக்கும் ஒரு பொது அமைப்பாக இருக்கவேண்டும் என்றுள்ள ஒரு கொள்கையின் அடிப்படையில் தான் இங்கும் கொண்டுவரப்பட்டிருக்கிறது என்பதை சபையிலுள்ள அங்கத்தினர்கள் அனைவரும் உணருவார்கள். கனம் அமைச்சர் அவர்கள் கூறியதுபோல் 198 பகுதிகள் கொண்ட இந்த பஞ்சாயத்து மசோதாவில் பெரும்பாலும் ஏற்கெனவேயுள்ள 1950-ம்வருஷத்திய பஞ்சாயத்து சட்டத்திலுள்ள விதிகளும், 1920-ம் ஜில்லா போர்டு விதிகளும் தான் இதில் திருப்பி தரப்பட்டிருக்கின்றன என்பதை நாம் பார்க்க முடிகிறது. இந்த இரண்டும் சேர்த்து ஒன்றாக கொடுக்கப்பட்டிருக்கிறதே தவிர இதில் பெரியதோர் மாற்றம்

23rd September 1958] [Sri M. P. Subramaniam]

ஒன்றுமில்லை என்பது தான் என்னுடைய கருத்து. இந்த மசோதாவைப் பற்றி பேசுகின்ற நேரத்தில் பல அங்கத்தினர்கள் நம் தமிழகத்தில் இதன் மூலம் கிராம ராஜ்யம், அல்லது ராமராஜ்யம் ஏற்படும் என்றும், காந்தி கண்ட கனவு நனவாகும் என்றும் சொன்னார்கள். அந்த கனவு நனவாக வேண்டும் என்பதில் எங்களுக்கு எந்தவிதமான ஆட்சேபமும் இடையாது. ஆனால் இந்த மசோதாவினால் அந்த நிலை ஏற்படுமா என்பது தான் என்னுடைய ஐயம். கிராமராஜ்யத்தைப் பொறுத்தவரையில் இப்போதில்லை என்றாலும் கூட தமிழகத்தில் சோழர்கள் ஆண்டு கொண்டிருந்த காலத்தில் கிராமங்களில் அம்மாதிரியான ஒரு ஆட்சி நடந்து கொண்டிருந்தது என்பது வெறும் கதைகள் அல்ல, அதற்கு வரலாறுகளே இருக்கின்றன. கிராமத்தில் ஏற்படுகின்ற காரியங்களை எல்லாம் கவனித்துக்கொள்ளுகின்ற "ஐவர் வாரியம்" போன்ற பஞ்சாயத்துக்களில் மக்கள் இருந்து செயல்பட்டு வந்திருக்கின்றன என்பதற்கு நல்ல ஆதாரங்கள் இருக்கின்றன. பஞ்சாயத்து மெம்பர் எல்லாம் ரகசிய முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள் என்பதற்கும் தக்க சான்றுகள் இருக்கின்றன. அந்த நிலையை ஒட்டி இந்த மசோதாவில் பார்க்க முடியவில்லை. இதிலுள்ள விதிகளை எல்லாம் பார்த்தாலும் கூட பஞ்சாயத்துக்களுக்கு போதுமான அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் அதற்கு இதில் இடம் இல்லை என்றே தெரிகிறது. யூனிட்ஸ் ஆப் ஸெல்ப் கவர்ன்மெண்ட் என்ற முறையில் அவர்களுக்கு பயிற்சி ஏற்படும் வகையில் அவர்களை நம்பி பொறுப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் இதில் பெரிய அளவில் இல்லை என்று சொல்லலாம். அமைச்சர் அவர்கள் கூறினதுபோல் இன்றைய தினம் ஜில்லா போர்டு—பஞ்சாயத்து அதிகாரங்கள், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் என்ற அளவில் அதிகாரங்கள் பிரிக்கப்பட்டுருக்கிறது. அவ்விதம் பிரிக்கப்பட்ட அதிகாரங்கள் எல்லாம் பரவலாக கொடுக்கப்படவில்லை. புதியதாக அதிகாரங்கள் கொடுக்கப்படவில்லை. அதிகாரங்கள் எல்லாம் பரவாலக இருக்க வேண்டும் என்று பல முறை இந்த சபையில் எல்லா தரப்பினர்களும் கூறிவந்திருக்கின்றனர். அவ்விதம் இருந்தும் இன்று பொது அதிகாரமே பரவலாக்கப்படவில்லை என்பதை நாம் உணருகிறோம். சென்னையில் இருக்கின்ற தலைமை அதிகாரங்கள் எல்லாம் பரவலாக கிராமத்திற்கு கொண்டு செல்லப்படவேண்டும். இந்த மசோதாவின் மூலம் ஒரு சில காரியங்களில் செயல்படுவதற்கு மாத்திரம் அவர்களுக்கு வாய்ப்பு அளிக்கப்பட்டிருந்தாலும்கூட, அதிகாரங்கள் எல்லாம் பரவலாக்கப்படவில்லை என்பதை நாம் இதிலிருந்து புரிந்து கொள்ள முடிகிறது. ஜன நாயக முறையில் பொது ஜனங்களுக்கு அதிகப்படியான அதிகாரங்களை கொடுக்கவேண்டும் என்று ஒப்புக்கொண்ட பிறகு பஞ்சாயத் தலைவர்களின் கையில் அதிகாரங்களை கொடுப்பதற்கு அரசாங்கம் ஏன் தயக்கம் காட்டுகிறது என்று எனக்குப் புரியவில்லை. இதைப்பற்றி அமைச்சர் அவர்கள் பேசுகின்ற நேரத்தில் அவர்கள் நல்ல முறையில் இந்த அதிகாரங்களை நிர்வகிக்க முடியாது, அதற்காகத்தான் நிர்வாக அதிகாரிகளை போட்டிருக்கிறோம். பஞ்சாயத் தலைவர்களால் இந்த அதிகாரங்களை கொண்டு நிர்வகிக்க முடியாது என்பதால் தான் அவர்களுக்கு இந்த அதிகாரங்களை கொடுப்பதற்கு தயக்கம் காட்டுகிறோம் என்று சொன்னார்கள். சாதாரணமாக கிராமத்தில் இருக்கின்ற மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அவர்களுக்கு இந்த அதிகாரங்களை கொண்டு நிர்வகிப்பதற்கு தகுதியும் நாணயமும் இல்லை என்றால், பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு இந்த சட்டசபையில் வந்திருக்கும் நம் போன்றவர்களுக்கும், அமைச்சரவையில் இருக்கின்றவர்களுக்கு இந்த தகுதியும் நாணயமும் எப்படி பொருந்தும் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. நம்மில் பலர் கிராமப்புறங்களில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்டு இங்கு வந்திருக்கிறோம். உண்மையிலே சொல்லப்போனால் நம்மைவிட நாணயமாகவும் முழு நேரமும் பொதுமக்களுக்காகவே வேலை செய்யக்கூடியவர்கள் கிராமப்புறங்களில் பலர் இருக்கின்றார்கள். இவர்களுக்கு முழு நேரம் தலைவர்களாக இருப்பதற்கு வாய்ப்பு இருக்காது என்று சொல்வது சரியல்ல. சில கிராமங்களை எடுத்துக்கொண்டு பார்த்தால் அந்த கிராமத்தின் நலனுக்காகவே, அங்கு நடைபெறுகின்ற சண்டை, சச்சரவை எல்லாம் தீர்த்து வைத்துக்கொண்டு, முழு நேரமும் கிராம

[Sri M. P. Subramaniam] [23rd September 1958

மக்களின் நலனுக்காக உழைத்து வரக்கூடியவர்கள் பலர் இருக்கிருர்கள். ஆதலால் பஞ்சாயத்து தலைவர்களுக்கு எல்லா அதிகாரங்களும் கொடுக்கப் படுமானல் அவர்கள் இதில் முழு நேரத்தையும் செலுத்தி பொது வாழ்க்கையில் வேலை செய்வதற்கு தயாராக இருக்கிருர்கள் என்பதை சர்க்காருக்கு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே பஞ்சாயத்து களுக்கு ஏற்கனவே இருந்து வந்த அதிகாரங்களையும் எடுத்து பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸிலுக்கு கொடுத்திருக்கிருேம், அந்த அளவுக்கு பஞ்சா யத்துக்களுக்கு கூடுதலாக புதிய அதிகாரங்களை கொடுத்திருக்கிருேமா என் பதை பார்த்தால் அவ்விதம் ஒன்றுமில்லை என்றுதான் இந்த மசோதாவி லிருந்து சொல்ல முடியும். அடுத்தபடியாக இந்த பஞ்சாயத்துக்களைப் பற்றியும் பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில் அமைப்பு முறையைப் பற்றியும் ஏற்கனவே பஞ்சாயத்து மசோதா கொண்டுவந்த நேரத்தில் இந்த பஞ்சா யத்து தலைவர் பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று பல முறை பல அங்கத்தினர்கள் சுட்டிக்காட்டினுர்கள். ஆனல், மக்கள் அந்த பஞ்சாயத்துத் தலைவர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டுமென்பதை மாற்றி விட்டு
11 a.m. பஞ்சாயத்து மெம்பர்கள் தேர்ந்தெடுக்கவேண்டுமென்று செய்த பிறகு, தமிழ கத்தில் பார்த்தால், எல்லா கிராமங்களிலும் அங்கு இருக்கக்கூடிய பஞ் சாயத்து மெம்பர்களை அங்கிருந்து பாண்டிச்சேரி, புதுக்கோட்டை, பங்களூர் போன்ற இடங்களுக்கு அழைத்துச் சென்று 1,000, 2,000 செலவு செய்து தலைவர் தேர்தலை வைத்துக்கொள்ளவேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதனல், ஒவ்வொரு கிராமத்திலும் பலத்த போட்டி, சண்டை, சச்சரவுகள் ஏற்படும். கிராமப் புரங்களில் நிலையான நிர்வாகம் ஏற்படாது. அந்த நிலை மாறவேண்டும். ஆகையால் பழைய முறையை—பொது மக்கள் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறையை—கொண்டுவரவேண்டும் என்று இந்த சந்தர்ப்பத்திலே வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில் அமைப்பு முறையைப் பார்த்தால், எல்லாப் பஞ்சாயத்துக்களுக்கும் ஒவ்வொரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்து அனுப்பவேண்டுமென்றிருக்கிறது. 500 மக்கள் தொகையைக் கொண்ட கிராமமாக இருந்தாலும் ஒரு பிரதிநிதியை அனுப்பவேண்டும், அல்லது 19,000 மக்கள் தொகையைக் கொண்ட ஒரு டவுன் பஞ்சாயத்தாக இருந்தா லும் ஒரு பிரதிநிதியைத்தான் அனுப்பவேண்டுமென்ற முறை இருக்கிறது. இது ஜனநாயக முறைக்கு உகந்ததாகாது. எல்லாப் பஞ்சாயத்துக்களும் பிரதிநிதிகளை அனுப்பலாம் என்றுலும் மக்கள் தொகை அடிப்படையில், பெரிய பஞ்சாயத்துக்கள் கூடுதலான நபர்களை அனுப்ப பஞ்சாயத்து மசோ தாவிலே, நல்ல முறையிலே விதிகளை மாற்றி அமைக்கவேண்டும். ஒவ் வொரு பஞ்சாயத்தும் ஒரு பிரதிநிதியை அனுப்பலாம் என்று வைத்து, அதே நேரத்தில் அதிகப்படியான ஜனத்தொகை இருக்கும் இடத்தி லிருந்து 2, 3 பிரதிநிதிகளை அனுப்ப வசதியளிக்கவேண்டும்.

அடுத்தபடியாக, பஞ்சாயத்தில் இல்லாதவர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பலாம் என்று இருப்பது மிக மிக மோசமானது. ஒரு நண்பர் கூறினுர், பஞ்சாயத்து தேர்தலிலே தோற்று விட்டவர்களும், அல்லது பஞ்சாயத்து தேர்தலிலே நிற்காமல் இருந்தவர்களும் அங்கத்தினர்களா வதற்கு வாய்ப்பு இருக்கின்ற காரணத்தால் வரவேற்கிறேன் என்று சொன் னுர். அவர் எந்த முறையிலே அதை வரவேற்கிருர் என்று புரியவில்லை. பஞ்சாயத்து மெம்பர்களில் ஒருவரை அனுப்பாமல், அங்கத்தினராக இல் லாத ஒருவரைத் தேர்ந்தெடுத்து அனுப்புவது நல்லதல்ல. இதை நிச்சயமாக மாற்றியமைக்கவேண்டும். அதே போல, தாழ்த்தப்பட்டவர் கள் சார்பாக, பெண்கள் சார்பாக மெம்பர்களாக கவுன்ஸிலில் யார் வேண்டு மானலும் எடுத்துகொள்ளலாம் என்று இருப்பதைவிட பஞ்சாயத்தில் இருப்பவர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும். அப்படி குறிப்பிட்ட எண்ணிக்கை பெண்கள் இல்லையென்றல் வெளியிலிருந்து பெண் மெம்பர்களைச் சேர்த் துக்கொள்ளலாம். ஏற்கெனவே உள்ளவர்களை விட்டு விட்டு மற்றவர்களை நேரடியாகக் கொண்டுவரலாம் என்று சொல்வது சரியல்ல.

மற்ருென்று சொல்ல விரும்புகிறேன். பஞ்சாயத்துத் தலைவர்களுக்கு அதிகாரம் கொடுத்து, எக்ஸிக்யூடிவ் ஆபீஸர்களும், கமிஷனர்களும் அவர் களுக்குக் கீழே வேலை செய்யவேண்டுமென்று பலர் வலியுறுத்திக் கூறினுர்

23rd September 1958] [Sri M. P. Subramaniam]

கள். இதைப்பற்றி நேற்று மாலை பேசிய நேரத்தில் அமைச்சர் அவர்கள், செக்ரட்டரி என்று மாற்றி விட்டால் காரியங்கள் நன்றாக ஆகிவிடாது, 7,000 கிராமங்களில் பஞ்சாயத்து தலைவர்களே நிர்வாக அதிகாரியாகவும், 300 கிராமங்களில் மட்டும் எக்ஸிக்யூடிவ் அதிகாரிகள் இருப்பார்கள் என்றும் சொன்னார்கள். 7,000 கிராமங்களில் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் அத்தனை பொறுப்பு எடுத்துக்கொண்டு நடத்துவார்கள் என்று அரசாங்கம் கருதும்போது, 300 பெரிய பஞ்சாயத்துக்களில் மட்டும்—படித்தவர்களும், தகுதியுள்ளவர்களும் இருப்பதற்கு வாய்ப்பு இருக்கும்படியான இடத்தில் மட்டும்—அவர்களிடத்திலே அதிகாரத்தை ஒப்படைக்காமல், அவர்களுக்குத் தகுதியில்லை என்று அதிகாரத்தை எக்ஸிக்யூடிவ் அதிகாரிகளிடம் ஒப்படைப்பது உகந்ததல்ல என்று கூறிக் கொள்கிறேன்.

கடைசியாக தேசீய அபிவிருத்தி வேலைகளை இதன் மூலமாகச் செய்ய வேண்டுமென்ற விதி முறை கட்டாயமாக இல்லை. ப்ளாக் டெவலப்மெண்ட் ஆபீஸர் பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸிலுக்கு நிர்வாக அதிகாரியாக இருந்தாலும், தேசீய விஸ்தரிப்பு திட்டத்தில், கட்டம் 1, கட்டம் 2 என்று 15 லட்ச ரூபாய் செலவழிப்பதை, பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸில் மூலமாகச் செய்யவேண்டுமென்று இல்லை. ப்ளாக் டெவலப்மெண்ட் ஆபீஸர் கமிஷனராக இருக்கிறார். ஆகையால், லோகல் டெவலப்மெண்ட் ஒர்க்ஸ், சமுதாய நலத் திட்டம், தேசீய விஸ்தரிப்பு திட்டம் இவை யாவையும் செயல்படுத்தக் கூடிய அதிகாரம் பஞ்சாயத்து யூனியனுக்கு இருக்க வேண்டும். அந்த வகையில் இவைகளை மாற்றி அமைக்கவேண்டும்.

இந்த மசோதா 198 பிரிவுகளைக் கொண்டுள்ளது, அதிலே பல உட்பிரிவுகள் வேறு. இதை 4 நாட்களிலே விவாதிக்கவேண்டுமென்று சொல்வது உகந்ததல்ல. இந்த மசோதாவிற்கு ஏறக்குறைய 400 திருத்தங்கள் கொண்டு வரப்பட்டுள்ளன பல அங்கத்தினர்களால். இவைகளையெல்லாம் யோசித்து முடிவு செய்ய இதற்கான காலத்தை நீட்டவேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**Sri S. LAZAR:** கனம் தலைவர் அவர்களே, இப்போது விவாதத்தில் இருக்கக்கூடிய, பஞ்சாயத்து மசோதாவை ஆதரித்து எனது கருத்துக்களைச் சொல்ல முற்படுகிறேன்.

இப்போது வந்திருக்கக் கூடிய மசோதாவின் அடிப்படை நோக்கம், ஏதோ ஸ்தல ஸ்தாபனங்கள் என்ற முறையிலே ஸ்தல நிர்வாகங்கள் இன்றைய தினம் நாட்டிலே இருந்து வருகின்றன என்றாலும், இவைகளை மாற்றி உண்மையிலேயே ஸ்தல சர்க்கார்களாக மாற்றியமைக்கவேண்டுமென்று இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. எனக்கு முன்னால் பேசிய ஒரு சில அன்பர்கள் பேச்சு அளவுக்கு—பிறர் சொல்லும் அளவுக்கு—ஸ்தல சர்க்கார்களாக அமையும் என்று சொல்கிறார்களே தவிர, இந்த மசோதாவிலுள்ள பிரிவுகளைப் பார்க்கும்போது, ஏற்கெனவே உள்ள ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் இதற்கும் எந்த விதமான வித்தியாசமும் இருக்கப் போவதில்லை என்று பேசினார்கள். இதைக் கேட்டபோது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. இதை நான் ஏன் சொல்கிறேன் என்று சொன்னால், இதிலுள்ள பிரிவுகளை ஒவ்வொன்றாகப் பார்த்தால், உள்ளபடியே எப்படி இன்றைய தினம் இங்கிலாந்து நாட்டிலே லோகல் கவர்ன்மெண்ட் 1933-லிருந்து இருந்து வருகிறதோ, அதே முறையிலே இந்தச் சட்டம் தொகுக்கப்பட்டிருக்கிறது என்பதை நன்றாகப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் கொள்கையில் ஒரு பெரிய மாறுதல் செய்ய முற்படும்போது ஒரு அளவுக்கு சற்று ஆலோசனை செய்யவேண்டியிருக்கிறது. இருந்தாலும், கொள்கை அடிப்படையில், இப்போது இருக்கக் கூடிய முறையை மாற்றி வேறு முறையைக் கையாள வேண்டுமென்று கொண்டு வரப்பட்டிருக்கிறது. அதே போல மெம்பர்களைப் பொறுத்த வரையில், கல்வியைப் பொறுத்ததாக இருந்தாலும், ஸ்தல நிர்வாகத்தைப் பொறுத்ததாக இருந்தாலும், இது போன்ற கொள்கையைப் பற்றிய சட்டங்களைக் கொண்டு வரக்கூடிய நேரத்தில் உள்ளபடியே ஒரு தடவை அல்ல, பல தடவைகள் நன்றாக ஆலோசனை செய்து கொண்டுவர வேண்டும் என்பது

[Sri S. Lazar] [23rd September 1958

எனது அபிப்பிராயம். இது போன்று கிராமங்களில் மாற்றம் செய்ய முற்படும்போதும், சமுதாயத்திலே மாறுதல்களைச் செய்ய முற்படும் போதும் நன்றாக ஆலோசனை செய்யவேண்டியது அவசியம். இவைகளைத் திருத்த வேண்டுமென்று சொல்லும் நாம், இவைகளை நன்றாக ஆலோசனை செய்து, பரிசீலனை செய்து, திட்டத்தை கொண்டு வந்து, பூர்ணமாக நடைமுறைக்குக் கொண்டு வந்து, உள்ளபடி வெற்றி காணமுடியவில்லை என்று சொன்னால் அப்போது மட்டுமே திருத்த முற்படவேண்டும். ஏற்கெனவே பஞ்சாயத்து சட்டம் 1950-லே கொண்டுவரப்பட்டது. கிராமங்களில் நல்ல நிர்வாகம் ஏற்படவேண்டுமென்பது நமது நோக்கம். அவைகளினால் இந்த மாகாணத்திலுள்ள எல்லா கிராமங்களிலும் வசதி ஏற்படவேண்டும், நல்ல கிராம அரசாங்கம் ஏற்படவேண்டும் என்ற நோக்கத்தோடு கொண்டு வரப்பட்டது. ஆனால் 8 ஆண்டுகள் நிறைவுற்ற போதிலும், இந்த ஒரு எண்ணத்தை எல்லா கிராமங்களிலும் பஞ்சாயத்து முறையை அமைக்க வேண்டுமென்ற அடிப்படைத் திட்டத்தைகூட செய்து முடிக்க முடியவில்லை. ஆகவே தான், இதைப் போன்ற திட்டங்களைக் கொண்டு வரும் போது நன்றாக ஆலோசனை செய்து கொண்டு வந்து திட்டத்தை நடை முறையில் கடைசி வரை நிறைவேற்றிய பிறகு தான், திருத்தங்கள் செய்வதைப் பற்றி சிந்திக்க வேண்டும். இப்போது இங்கிலாந்து தேசத்தில் இருந்து வரக் கூடிய ஸ்தல ஸ்தாபனங்கள் பல நூறு ஆண்டுகளாக இருக்கின்றன. பல ஆண்டுகளுக்குப் பிறகு 1933-ம் ஆண்டிலே ஒரு சட்ட வாயிலாக வகுத்தார்கள். 1947-ம் வருஷத்திலே ஒரு தனிக் குழுவை நியமித்தார்கள் இவைகளைப் பற்றி பரிசீலனை செய்யவேண்டுமென்று. கமிட்டியினர் இதிலே ஏராளமான திருத்தங்களைக் கொண்டுவர வேண்டுமென்று சொன்ன போதிலும் அரசாங்கம் சற்று பின் தங்கியது. என்? நடை முறையிலே உள்ள ஸ்தல ஸ்தாபனங்கள் நல்ல முறையிலே நடந்து வருகிறது. கொள்கை அடிப்படையில் பல திருத்தங்களைக்
11-10 a.m. கொண்டு வரவேண்டுமென்று சொல்கிறார்கள். அவைகளை நன்றாகப் பரிசீலனை செய்துதான் கொண்டு வர வேண்டுமென்ற எண்ணம் கொண்டிருக்கிறார்கள் அங்கே. அதே போல இப்போது நாம் கொண்டுவந்திருக்கக்கூடிய மசோதாவிலே பெரிய மாறுதல்களைச் செய்திருக்கிறோம். இப்போது இந்த மசோதாவின் பிரகாரம் ஏற்கெனவே இருக்கக்கூடிய அதிகாரங்களை விட பல முக்கிய அதிகாரங்களை யெல்லாம் கொடுக்கப் போகிறார்கள். இவைகளைப் பார்க்கும்போது ஸ்தல ஸ்தாபனங்கள் ஸ்தல சர்க்கார்களாக அமையவேண்டுமென்ற நோக்கத்தோடு கொண்டுவரப்பட்டதாக இருக்கிறது. ஆங்காங்கு ஏற்படக் கூடிய பஞ்சாயத்துக்களும், பஞ்சாயத்து யூனியன்களும் நல்ல ஸ்தல சர்க்கார்களாக அமைய வேண்டுமென்ற நோக்கம் சர்க்காருக்கு இருக்கின்றது. அந்த எண்ணம் நிறைவேறவேண்டும் என்று சொன்னால், நிர்வாக பொறுப்பு பூராவையும் பஞ்சாயத்துகளுக்குக் கொடுத்து, கொள்கை வகுக்கும் அதிகாரத்தை மட்டும் அரசாங்கம் வைத்துக்கொள்ளுமேயானால் அது மிகவும் நல்ல முறையில் அமைவதாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஆனால் நாம் இப்பொழுது பார்க்கக்கூடியது என்னவென்றால், கொள்கை அடிப்படையில் தலையிடுவது மட்டுமன்றி, நிர்வாகத்திலும் கூட அரசாங்கம் தலையிடுவதற்கான பல அம்சங்கள் இம்மசோதாவில் காணப்படுகின்றன. அதோடு கூட இப்பொழுது இருக்கக்கூடிய ஸ்தல ஸ்தாபனங்களுக்கு பல அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. விவசாய உற்பத்தி, தொழில் அபிவிருத்தி போன்ற தேசீயக் கொள்கையின் அடிப்படையில் இருக்கக்கூடிய திட்டங்களையும் அவர்களுக்குக் கொடுப்போமேயானால், உண்மையில் எந்த அளவுக்கு நன்மை பயக்கும் என்று சந்தேகிக்க வேண்டியதாகத்தான் இருக்கிறது.

மேலும் இந்த மசோதாவில் பல பிரிவுகள் இருக்கின்றன. ஒவ்வொரு இடத்திலும் பஞ்சாயத்து எல்லையை நிர்ணயிக்கவேண்டிய முடிவோ, பஞ்சாயத்தின் பகுதிகளை மாற்றியமைப்பதோ, யூனியன் பகுதிகளை மாற்றியமைப்பதற்கான அதிகாரமோ இன்ஸ்பெக்டர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த அதிகாரத்தை அமல் நடத்துகிற நேரத்தில் அரசியல் சார்பாக வரக்கூடிய மாறுதலாக இருந்தாலும் சரி, மக்களிடத்திலிருந்து

23rd September 1958] [Sri S. Lazar]

வரக்கூடிய மாறுதலாக இருந்தாலும் சரி, நன்றாகப் பரிசீலனை செய்து முடிவு செய்யவேண்டுமென்பது தான் என்னுடைய அபிப்பிராயம். இப்பேற்பட்ட மாறுதல் செய்ய வேண்டும் என்கிற எண்ணம் அரசாங்கத்திற்கு ஏற்படுகிறபொழுது, எந்தெந்த ஸ்தலங்கள் பாதிக்கப்படுகின்றனவோ, அந்த அந்த ஸ்தல மக்களுடைய ஆட்சேபனைகளை மட்டும் தெரிந்துகொண்டால் போதாது. அந்தந்த இடத்திலேயே விசாரணை நடத்தி, மாறுதல் அவசியமா, இல்லையா என்பதை நன்கு விசாரித்த பிறகு, அதைச் செய்ய வேண்டுமென்பது என்னுடைய கருத்து.

ஹரிஜன சமுதாயத்தைச் சேர்ந்தவர்களுக்கும், பெண்களுக்கும் சேர்த்து இடம் ஒதுக்கப்படவேண்டுமென்ற முறையில் மசோதா அமைந்திருக்கிறது. பஞ்சாயத்துகளிலே ஹரிஜனங்களுக்கு மட்டுமில்லாமல் பெண்களுக்கும் தனி இடம் ஒதுக்கவேண்டுமென்று பொறுக்குக் கமிட்டிக் கூட்டங்களில் பல அங்கத்தினர்கள் சொல்லியிருக்கிறார்கள். அதை ஏற்றுக்கொண்டு, அவர்களுக்கு தனி இடம் ஒதுக்கிக் கொடுத்தால் நன்றாக இருக்கும். ஹரிஜனங்களுக்காக தனி இடம் ஒதுக்கிக் கொடுக்க வேண்டுமென்று சொல்லுகின்ற நேரத்தில், இப்பொழுது பல ஹரிஜனச் சேரிகளில் கிருஸ்தவர்களும் இருக்கிறார்கள். அப்படி கிருஸ்தவர்கள் இருந்தால் அவர்களுக்கும் ஒதுக்கக் கொடுக்க வேண்டும் என்ற முறையைக் கொண்டுவந்தால் நல்ல முறையாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இந்த பஞ்சாயத்து யூனியன் அமைக்கிறபொழுது, அதிலே அங்கம் வகிப்பவர்கள் எம். எல். ஸிக்கள், பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் ஆக இருக்க முடியாது என்று சொல்லுவது உண்மையில் ஜனநாயகத்திற்குப் புறம்பாக இருக்கிறது. இந்த மேல்சபை அங்கத்தினர்கள் பொதுமக்களோடு நெருங்கிய தொடர்பு உள்ளவர்களாக இருக்கிறார்கள். நேரடியாக பொதுமக்களின் வாக்குகளைப் பெற்ற பார்லிமெண்ட் அங்கத்தினர்களும் இருக்கிறார்கள். ஆகவே அவர்களுக்கும் இதிலே இடம் கொடுப்பதுதான் உண்மையில் உகந்ததாக இருக்கும். அப்படி இடம் கொடுப்பதிலே ஒருவேளை எத்தனை இடங்களுக்கு ஸ்தானங்கள் கொடுப்பது என்பது போன்ற கஷ்டங்கள் நடைமுறையில் ஏற்படலாம். அப்படி வரும்போது, ஏதாவது ஒரு கவுன்சிலில் இருக்கலாம் என்று சொல்லி, அவர்களுக்கே "ஆப்ஷனை"க் கொடுத்து விட்டால் நன்றாக இருக்கும்.

இந்த பஞ்சாயத்து யூனியனுக்கு தலைவராக வரக்கூடிய வாய்ப்பு அதிலே அங்கத்தினர்களாக வரக்கூடியவர்களுக்கே இருக்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பொதுமக்களின் ஆயிரக்கணக்கான, லட்சக்கணக்கான வாக்குகளைப் பெற்றவர்கள் சட்டசபை அங்கத்தினர்களும், பார்லிமெண்ட் அங்கத்தினர்களும், அப்படி வந்திருக்கக்கூடியவர்கள் ஏன் இந்த பஞ்சாயத்து யூனியனிலே தலைவராக வரக்கூடாது.? உண்மையில் இதைத் திருத்தவேண்டுமென்பதுதான் என் போன்றவர்களின் அபிப்பிராயம். தேர்தல் நடக்கிற நேரத்திலே, தனித்தனியாக வார்டுகளைப் பிரித்து, அந்த வார்டிலே உள்ள எண்ணிக்கைக்குத் தகுந்தவாறு 3, 4 அல்லது 5 பேர்கள் இருக்கமுடியும் என்பதை மாற்றி, ஒரு வார்டு என்று இருந்தால் ஒருவர் மட்டுமே பிரதிநிதியாக இருக்கவேண்டும் என்று அமைத்தால் நன்றாக இருக்கும். நடைமுறையில் உள்ள கஷ்டங்கள் நீங்கும். இன்னும் மசோதாவில் பல முக்கிய அம்சங்கள் இருக்கின்றன.

DEPUTY SPEAKER: The hon. Member's time is up.

SRI S. SADASIVAM: மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, இந்த பஞ்சாயத்து மசோதாவை ஆதரித்து நான் ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த மசோதாவானது நமது நாட்டிலே கிராமப்புறங்களிலே வாழும் மக்களிடம் ஒரு நல்ல உணர்ச்சியை ஊட்டும் என்பது என்னுடைய கருத்து. விவசாயத் தொழிலை அடிப்படையாகக் கொண்ட ஒரு நாடாக இருந்தும், இன்று போதிய உணவுப் பொருள்கள் இல்லாததன்

காரணமாக நாம் மிகவும் கஷ்டப்படவேண்டிய நிலையிலிருக்கிறோம். ஆகவே கிராமப்புற மக்களின் வாழ்க்கை நிலையை உயர்த்தினால்தான் விவசாயம் நல்ல முறையிலே வளரும். கிராமத்திலுள்ள மக்கள் சிரிய வாழ்க்கை நடத்துவதற்கு வேண்டிய வழிவகைகளை அங்குள்ள மக்களே செய்துகொள்வதற்கான வாய்ப்பை அளிக்கும் வகையில் சர்க்கார் இந்த மசோதாவைக் கொண்டுவந்திருக்கிறார்கள். இந்த பஞ்சாயத்துக்கள் சரியான முறையிலே இயங்கவேண்டுமென்பதோடு மட்டுமல்லாமல், ஜில்லா ரீதியாக அமைக்கப்பட்டிருந்த நிர்வாகமானது பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, மக்களுக்கு வேண்டிய தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையிலே அமைக்கப்பட்டிருக்கிறது. இந்த பஞ்சாயத்து யூனியன் மூலமாக நல்ல பல திட்டங்களை நிறைவேற்றுவதற்கு, பஞ்சாயத்துக்களுக்கும், பஞ்சாயத்து யூனியன்களுக்கும் போதிய பொறுப்புகள் கொடுக்கப்படவேண்டும். 1950-ம் ஆண்டில் இங்கு பஞ்சாயத்து சட்டம் கொண்டுவரப்பட்டும் இன்னும் சில விதிகள் அமலுக்கு வராமல் இருக்கிறது. அப்படியல்லாமல் இந்த மசோதாவில் முழுப் பலனையும் அடைவதற்கான வழிவகைகளை சர்க்கார் செய்ய முன்வரவேண்டும். சமுதாய நலத்திட்டங்கள், தேசிய விஸ்தரிப்பு திட்டங்கள் இவைகள் எல்லாம் அந்த வட்டாரத்திலிருக்கிற பஞ்சாயத்து யூனியன்கள் மூலம் நிறைவேற்றுவதற்கு வழிவகை செய்திருக்கிறார்கள். இன்று அபிவிருத்தித் திட்டங்கள் நம் நாட்டிலே சரியானபடி இயங்கி வருவதற்குக் காரணம் விவசாயம் அதிலே அடங்கியிருக்கிறது. அந்த அபிவிருத்தி அதிகாரிகளையும் விஸ்தரிப்புத் திட்டத்திலுள்ள தொகையையும் வைத்துக்கொண்டு, பஞ்சாயத்து தொகையையும் சேர்த்து இதிலே செலவிடச் செய்தால் இன்னும் நல்ல பலனை அடையலாம். இன்று கிராமப்புறங்களுக்கு வேண்டிய சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களை அந்தந்த பஞ்சாயத்துக்கள் மூலம் கணக்கிட்டு, அந்தத் திட்டங்களை இந்த பஞ்சாயத்து யூனியன் மூலம் நிறைவேற்றுவதற்கு அரசாங்கம் வழிவகை செய்ய வேண்டும். இந்த பஞ்சாயத்து யூனியன்களிலே, அந்தந்த வட்டாரங்களுக்கு வேண்டிய நவீன கருவிகளை விவசாயிகளுக்கு சப்ளை செய்வதற்காக, தனி இலாக்கா அமைத்து, அதன் மூலமாகக் கொடுக்க முன்வந்தால் இன்றுள்ள நிலையிலே விவசாயம் அபிவிருத்தி அடையும். அதே போன்று இன்று கிராமப்புறங்களிலுள்ள மக்கள் தாங்கள் விளைவிக்கும் பொருள்களை வெளியிடங்களுக்குக் கொண்டு போய் விற்பதற்கு ரோடு வசதிகள் செய்து கொடுக்கவேண்டும். இப்பொழுது சரியான மார்க்கங்கள் இல்லாததால் கஷ்டப்படுகிறார்கள்.

11-20 a.m. அப்படியிருக்கும் நிலையில் மிகவும் பிற்பட்ட பிரதேசங்கள் நிறைந்துள்ள இடங்களில் கிராம பஞ்சாயத்துகள் இயங்கும் போது, அவைகளுக்கு வேண்டிய நிதி வசதிகள் இல்லாதுபோக இந்த மசோதாவில் வழிவகைகள் இருக்கின்றன. அப்படிப்பட்ட வறண்ட பிரதேசங்களைக்கொண்ட சிறு சிறு கிராம பஞ்சாயத்துகளுக்குச் சிறு சிறு ரோடு முதலிய வசதிகளை செய்து கொள்ளுவதற்கு தனியாக சில நிதிகளை அரசாங்கம் கொடுத்து உதவ முன்வரவேண்டும். அதேபோல், பெரும் கிராமங்களில், அதாவது 500 ஜனத்தொகைக்கு மேற்பட்ட இடங்களில் எல்லாம் ஆரம்ப பாடசாலைகள் அமைக்கவேண்டுமென்று விதிகள் இருக்கின்றன. இருந்தாலும், இன்னும் சில இடங்களிலே 500 ஜனத்தொகைக்கு மேற்பட்ட பல கிராமங்களிலே பள்ளிகள் அமைக்கப்படவில்லை. காரணம், அங்கு 500 ஜனத்தொகைக்கு மேல் இருக்கிறார்கள் என்ற புள்ளி விவரம் சரியான முறையில் எடுப்பதற்கு வேண்டிய முயற்சிகள் செய்யப்படவில்லை. இந்தப் பஞ்சாயத்து யூனியன்கள் நல்ல முறையில் இயங்குமேயானால், 500 ஜனத்தொகைக்கு மேல் உள்ள பகுதிகளில் பள்ளிகள் இயங்குவதற்கு வேண்டிய—போதாமல் இருக்கும்—தொகைகளை அரசாங்கம் கொடுக்கவேண்டுமென்று கருதும்போது உடனடியாக அப்படிப்பட்ட இடங்களில் பாடசாலைகளை ஏற்படுத்தப் போதிய நிதி உதவி செய்ய தகுந்த முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். நிதி அதற்குப் போதுமா என்பதை நன்கு ஆராய்ந்து, உடனடியாக கல்வி சலுகைகளை கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

23rd September 1958] [Sri S. Sadasivam]

இதேபோல் இன்று பெரும் பகுதியான பல இடங்களில் குடி தண்ணீர் வசதி இல்லாமல் இருக்கிறது. குடி தண்ணீர் வசதி ஏற்படுத்துவதற்கு வேண்டிய பொருளாதார வசதி அந்தந்த பஞ்சாயத்துகளுக்கு இல்லை. அதற்கு வேண்டிய நிதி நிலை இல்லை. சமுதாய நலத் திட்டம், தேசீய விஸ்தரிப்புத் திட்டம் இயங்கும் பகுதிகளிலே கொடுக்கின்ற தொகை போதாமல், மக்கள் கொடுக்கும் தொகையும் பஞ்சாயத்து மூலம் செலவழிக்கப்படுகிறது. இப்பொழுது பஞ்சாயத்து யூனியன்கள் அமைக்கப்படுவதன் காரணமாக இதற்கு வேண்டிய ஒரு நல்ல வாய்ப்பும், அந்தப் பிரதேசங்களில் இதற்கு வேண்டிய வசதிகள் செய்ய வழி வகைகளும் இருக்கின்றன.

அந்தந்த பஞ்சாயத்துக்களில் கொடுக்கக்கூடிய வரியானது ஆங்காங்குள்ள கிராம அதிகாரிகளால் வசூலிக்கப்படும் என்ற ஒரு விதி இதிலே அமைக்கப்பட்டிருக்கிறது. கிராம அதிகாரிகள் தங்களுக்குப் போதிய சம்பளம் இல்லை என்று கிளர்ச்சி செய்துவருகிற இந்த நேரத்தில், அவர்கள் கஷ்டப்படும் நேரத்தில் இந்த வரியிலே அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய $6\frac{1}{4}$ சத விகிதம் என்ற உச்ச அளவை இன்னும் கொஞ்சம் உயர்த்தினால் அவர்கள் ஓரளவாவது திருப்தி அடைவார்கள் என்று கருதுகிறேன். எதிர்பார்த்த அளவுக்கு மேல் வரியும் வசூலாகும்.

இதுபோன்ற நல்ல கருத்துக்களையும், கிராமத்தினுடைய முன்னேற்றத்தையும் நோக்கமாகக் கொண்டு இயங்கக்கூடிய பஞ்சாயத்து யூனியன்களை அமைக்கப்போகும் இந்தச் சட்டத்திலுள்ள உள் விதிகளை அமைக்கும்போது, கிராம மக்கள் நல்ல வகையில் பயனடையக்கூடியவாறும், பொதுவாக நாட்டு மக்கள் சீறிய வாழ்வு நடத்தும் வகையில் உள்ள அம்சங்களைக் கொண்டதாகவும் அமைக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த மசோதாவை முழு மனதோடு வரவேற்கிறேன்.

*SRI P. VEDAMANICKAM : மேன்மை தங்கிய தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் பஞ்சாயத்து மசோதாவை நான் ஆதரித்து, வரவேற்று பேசுகிறேன். சென்னை மாநிலமானது 358 யூனியன் கவுன்சில்களாகப் பிரிக்கப்பட்டு, ஜில்லா போர்டுகளின் நிர்வாகத்தில் இருந்த பல வேலைகளைக் குறைத்து, நிர்வாகத் திறமைக்காக குறைந்தது 80 கிராமங்களுக்கு ஒரு கவுன்சில் ஏற்படுத்தி அதன் மூலம் மக்களுக்கு நன்மை செய்யும் இந்த மசோதாவை நான் மிகவும் வரவேற்கிறேன். இந்த யூனியன் கவுன்சில் தலைவர்கள், பஞ்சாயத்து தலைவர்கள் சென்ற ஒரு ஆண்டுக்கு முன்னால் பொது மக்களாலேயே தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஆனால், இப்பொழுது பஞ்சாயத்து அங்கத்தினர்களாலேயே தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இதனால் கிராமங்களிலே பல ஊழல்கள் ஏற்படுகின்றன. தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் தங்களுக்கு வோட்டு அளிக்க உரிமை இருந்தபோதிலும், அவர்கள் வோட்டு அளிக்க முடியாததால், தவறுகள் பல ஏற்பட்டு, அல்லல் படுகிறார்கள். தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் தலைவர் தேர்தல் காரியங்களில் ஏமாற்றப்பட்டு அல்லல் படுகிறார்கள். அதை நாம் நேரடியாகப் பார்க்கிறோம். ஆகவே, அரசாங்கம் பொது மக்களே வோட்டு அளித்து தலைவர்களைத் தேர்ந்தெடுக்க சிபார்சு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தப்படியாக, பஞ்சாயத்து முறையிலே வாக்காளர் ஜாபிதா எடுப்பது மிகவும் முக்கியமானது. இப்பொழுது எடுத்துள்ள வாக்காளர் ஜாபிதாவில் மிகவும் சிக்கல்கள் இருக்கின்றன. ஒற்றை முறை வோட்டுதான் நல்லது. ஒவ்வொரு தொகுதியையும் பிரித்து "ஸிங்கில் வோடிங்" முறை ஏற்படுத்தவேண்டும். இரட்டை வோட்டு முறையில் பல சிக்கல்கள் ஏற்பட்டு வோட்டர்கள் மிகவும் அல்லல் படுகிறார்கள். தனித்தனி வார்டாகப் பிரித்து ஒற்றை வோட்டு முறை வைப்பதுதான் நல்லது என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

[Sri P. Vedamanickam] [23rd September 1958

அடுத்தபடியாக, பஞ்சாயத்துகளிலே தாழ்த்தப்பட்ட மக்களுக்கும், பெண்களுக்கும் ரிசர்வ் ஸீட்டுகள் ஒதுக்குவது மிகவும் வரவேற்கத்தக்கது. ஒவ்வொரு பஞ்சாயத்திலும் 3, 4 சேரிகள் இருக்கின்றன. ஒவ்வொரு சேரியிலும் வோட்டர்கள் இருக்கிறார்கள். பொதுவாக வோட்டு அளிக்கப் படுவதால் பஞ்சாயத்துகளுக்கு ஹரிஜனங்கள் அங்கத்தினர்களாக வரமுடிய வில்லை. விகிதத்திற்கு குறைந்து இருந்தால், ஒவ்வொரு சேரிக்கும் ரிசர்வ் ஸீட் ஒதுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். பெரும் பாலும் பெண்களுக்கு ரிசர்வ் ஸீட் கிடையாது. எங்கள் தாலூக்காவில் அநேக பஞ்சாயத்துக்களில் பெண்களே கிடையாது. விருத்தாசலம், திட்டக் குடி, பெண்ணாடம் போன்ற பஞ்சாயத்துக்களில் பெண்களே கிடையாது. கிராம பஞ்சாயத்துகள் விசேஷமாக கிராம சுகாதாரத்தைக் கவனிக்கவேண்டி யிருப்பதால், வீட்டு சுகாதாரத்தை கவனிக்கும் பெண்களுக்கு பஞ்சாயத் திலும் ரிசர்வ் ஸீட்டுகள் ஒதுக்கவேண்டும். பஞ்சாயத்துகளில் கட்டாயம் பெண்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கப்படவேண்டுமென்று கேட்டுக்கொள்ளு கிறேன்.

ஒவ்வொரு யூனியன் கவுன்சிலும் சட்டசபை உறுப்பினர்கள் எக்ஸ்-அபிஷியோ மெம்பர்களாக இருப்பார்கள். அதேபோல் பஞ்சாயத்திலும் எம்.எல்.ஏக்கள் எக்ஸ்—அபிஷியோ மெம்பர்களாக இருக்க வேண்டும். ஏனென்றால், அந்த பஞ்சாயத்து செய்யவேண்டிய காரியங்களில் அவர் பங்கு எடுத்துக்கொண்டால்தான் அவர் இருக்கும் கிராமத்தை நன்றாக அபிவிருத்தி செய்யமுடியும். விருத்தாசலம் பஞ்சாயத்து முதல் கிரேடு பஞ்சாயத்து. நான் இருக்கும் பகுதியில், புதுப்பேட்டையில் 25 ஆண்டுகளாக எல்லா வரிகளையும் செலுத்திக்கொண்டு வருகிறோம். ஆனால் புதுப் பேட்டைக்குக் குதிரை வண்டியிலோ, காரிலோ போக முடியாது. அதற்கு வசதியான ரோடு இல்லை. இதுபற்றி நான் பஞ்சாயத்து மெம்பர்களையும், தலைவர், உபதலைவரையும் பல முறை கேட்டிருக்கிறேன். இதுவரையில் ஒன்றும் பயன் கிடைக்கவில்லை. வரிப் பணம் மட்டும் ஆயிரக்கணக்கில் வசூல் செய்கிறார்கள். ஆகவே, எம்.எல்.ஏக்களுக்கும் பஞ்சாயத்துகளில் எக்ஸ்—அபிஷியோ மெம்பர்களாக இருக்கவேண்டுமென்று அரசாங்கம் சிபார்சு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

யூனியன் கவுன்சில்களில் எம்.எல்-ஏக்கள் எக்ஸ்—அபிஷியோ மெம்பர் களாக இருக்கிறார்கள். அவர்களுக்குக் கட்டாயம் வோடிங் பவர் தேவை. யூனியன் கவுன்சில் ஜில்லா போர்டுக்கு நிகரானது. அப்படிப்பட்ட யூனி யன் கவுன்சிலில் தன் தொகுதியைப் பொறுத்து அநேக ரிஸல்யூஷன் கள் கொண்டு போகவேண்டியிருக்கும். ஆகவே, எம்.எல்.ஏக்களுக்கு அந்த சமயங்களில் வோட்டிங் பவர் இல்லாவிட்டால் வேலை செய்ய முடியாது. ஆகவே, சட்டசபை உறுப்பினர்களுக்கு யூனியன் கவுன்சில்களில் வோடிங் பவர் கொடுக்கவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

11-30 a.m. அடுத்தப்படியாக, 500 ஜனத்தொகை கொண்ட பஞ்சாயத்திலிருந்து யூனியன் கவுன்சிலுக்கு ஒரு அங்கத்தினர் எடுக்கலாம். அதே சமயத்தில் 20,000, 15,000 மக்கள் கொண்ட பெரிய பஞ்சாயத்துக்கும் ஒரு மெம்பர் எடுப்பது மிகவும் வருந்ததக்க விஷயம். ஒவ்வொரு பெரிய பஞ்சாயத்தி லிருந்தும், டவுன் பஞ்சாயத்திலிருந்தும் குறைந்தது 2 மெம்பர்களாவது எடுக்கவேண்டும். அப்படி எடுப்பதிலே, ஒரு ரிசர்வ் மெம்பர் யூனியன் கவுன்சிலிலே பங்கு எடுக்கவேண்டும். அதையும் அரசாங்கம் செய்யும்படி தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். பஞ்சாயத்து சட்டத்தை மீறி குற்றம் செய்யும் நபர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கும் தண்டனை அதிகமாக இருக்கிறது. அவைகளைக் குறைத்து, குறைந்த அளவில் அதைச் செய்ய வேண்டும். அபராதத் தொகையும் குறைவாக இருக்கவேண்டும் என்று சிபாரிசு செய்கிறேன். எம்.எல்.ஏக்களுக்கும் ஓட்டிங் பவர் கொடுக்க வேண்டும் என்று மீண்டும் சொல்லிக்கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

23rd September 1958]

* **SRI M. KANDASAMI PADAYACHI** : சட்ட மன்ற உப தலைவர் அவர்களே, இந்தச் சட்ட மன்றத்திலே வந்திருக்கும் பஞ்சாயத்து சட்டத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் பேச ஆசைப்படுகிறேன்.

(Mr. Speaker in the Chair.)

இப்பொழுது ஜில்லா போர்டுகளை நீக்கி விட்டு, கிராமங்களிலே பஞ்சாயத்து களையும், பஞ்சாயத்து யூனியன்களையும் நடத்த வேண்டும் என்ற ஆசை யில் அரசாங்கம் இந்தச் சட்டத்தைச் செய்ய முன் வந்திருக்கிறார்கள். அப்படி வரும்போது, 500 ஜனத்தொகையுள்ள கிராமங்களிலெல்லாம், எலெக் ஷன் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் கொண்ட கௌன் சில்கள் எல்லா வசதிகளையும் செய்து கொடுக்கும். ஒவ்வொரு கிராமத் திற்கும், ரோட் வசதி, கல்வி வசதி, சுகாதார வசதி இவைகளெல்லாம் வேண்டும். இவற்றிற்கெல்லாம் அந்தப் பஞ்சாயத்துகளுக்குப் பண வசதி வேண்டும். அப்படிப் பண வசதி ஏற்பட அவர்கள் சில வரிகளைப் போடு வார்கள் என்பது ரொம்ப நல்லது. ஆனாலும், அரசாங்கத்தாரின் பேரு தவியையும் அவர்கள் எதிர் பார்க்கிறார்கள்.

டவுன் பஞ்சாயத்தில் நான் 10 வருஷகாலம் மெம்பராக இருந்து இருக்கிறேன். 1959–ம் ஆக்ட்படி போட்டிருக்கும் எக்ஸிக்யூடிவ் ஆபீசர்கள், முனிசிபாலிட்டி கமிஷனர் போலவே, தலைவர் பேச்சைக் கேட்ப தில்லை. அவர்கள் தங்கள் சிப்பந்திகளை வைத்துக்கொண்டு தங்கள் இஷ்டப் படி காரியங்களைச் செய்கிறார்கள். தங்கள் இஷ்டம் போல் திட்டங்கள் போட்டு அவற்றைக் கௌன்சிலில் நிறைவேற்றச் சொல்லுகிறார்கள். நிறை வேற்றினாலும், நிறைவேற்றாவிட்டாலும் பரவாயில்லை யென்ற முறையில் அவர்கள் தங்கள் பவர் இருப்பதால் செய்கிறார்கள். அவர்கள் தலைவர் உத்தரவின் மேல் செய்வது என்றிருந்தால் நலமாகயிருக்கும். அது இல்லை. அல்லது, இவர்கள் கான்பிடன்ஷல் ரிப்போர்டிலாவது, அவரது ஒத்துழைப்பு, திறமை இவற்றைப்பற்றி தலைவர் எழுதக் கூடிய நிலைமை இருக்கவேண்டும்.

ஏற்கனவே, பஞ்சாயத்துக்கு ஸிவில், கிரிமினல் பவர்கள் இருந்தன. அவை இந்தச் சட்டத்தில் இல்லையென்று தெரிகிறது. கிராமங்களிலே நடப் பது உண்மையா, இல்லையா என்பது அங்குள்ள பஞ்சாயத்தார்களுக்குத் தான் தெரியும். இது ஓரளவு மக்களுக்குத் தெரியும். அதைவிட்டு டிபார்ட் மெண்டில் இருப்பவர்களுக்கு என்ன தெரியும்? ஏழை மக்கள், அவர் களிடம் ஏற்படும் தகராறுகளை, ரூபாய் 50, 100, 200 போன்ற சிறு தொகை சம்பந்தப்பட்ட வழக்குகளை, பஞ்சாயத்தார்களும் அவர்களுமே தீர்க்க முடியு மேயல்லாது, டிபார்ட்மெண்ட்காரர்களுக்கு ஒன்றும் புரியாது, தெரியாது. அந்த ஊரிலேயே வேண்டாதவர்கள் இருந்து எதிராகப் பேசி டிபார்ட் மெண்டுக்கு குழப்பத்தை ஏற்படுத்துவார்கள். ஆகவே, அந்த சிவில் அதிகாரத்தை அவர்களிடம் இருந்து எடுத்தது சரியில்லையென்றாலும், அதை நல்ல முறையிலே அமல் நடத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

எம்.எல்.ஏக்களுக்கு கௌன்சிலில் அங்கம் வகிக்கும் உரிமை கொடுக் கப்பட்டிருக்கிறது. ஆனால் வோட்டுரிமை அளிக்கப்படவில்லை. அது வருந்த தக்க விஷயம். ஆகவே, அவர்களுக்கு வோட்டுரிமையும் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இல்லாவிடில், கிராம நன்மைக்கான காரி யங்கள் வரும்போது அவர்கள் நன்றாகப் பணியாற்ற முடியாது.

இந்த பிளாக்கு திட்டங்களை தீட்டும் தோறும், பிளாக் டெவலெப் மெண்ட் ஆபீசர், கமிஷனர் போன்றவர்கள், அந்த பஞ்சாயத்து போர்ட் தலைவரையும் கலந்து கொண்டு செய்யவேண்டும், திட்டங்களை வகுக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு, என் உரையை முடித்துக்கொள்ளு கிறேன்.

**MR. SPEAKER** : இன்னும் 20 அங்கத்தினர்கள் பேச வேண்டும் என்று கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். இருப்பது இரண்டு மணி நேரந் தான். ஆகையால் ஒவ்வொரு அங்கத்தினரும் இனி ஐந்து நிமிஷமே பேசவேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

III.—GOVERNMENT BILLS—*cont.*

(2) THE MADRAS PANCHAYATS BILL, 1958
(L.A. BILL NO. 33 OF 1958)—*cont.*

MR. SPEAKER : We will have general discussion or clause by clause discussion or the third reading till the morning of 30th September. This evening, to-morrow evening and on the 25th evening we shall have no sitting because the Members of the Committee on Local Administration, leaders of Parties and all other Members interested will be having a discussion in this Chamber.

I would also appeal to hon. Members that they must sit down when I ring the bell. Sri A. Vedarathnam will now speak.

SRI V. SANKARAN : Sir, on a point of information. Instead of five minutes, ten minutes may be allowed to the members.

MR. SPEAKER : I have already stated that on the 24th the Hon. Minister for Finance, the Hon. Minister for Local Administration and four leaders of Parties will speak. If there is any more time, I shall certainly allow hon. Members to speak. But I certainly hope the hon. Member, Sri Sankaran, will finish what all he has to say within five minutes.

* SRI A. VEDARATHNAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த பஞ்சாயத்து " பில் " ரொம்பவும் புரட்சிகரமானதா இல்லையா, கிராமவாசிகளுக்கு அதிகாரம் மாற்றப்பட்டிருக்கிறதா இல்லையா என்ற விஷயங்களைப்பற்றியும் இரு தரப்பினர்களுடைய அபிப்பிராயங்களை இது வரையிலும் பல உறுப்பினர்களால் இங்கே பேசப்பட்டது. புரட்சிகரமான சட்டங்கள் இந்தச் சபையில் இதற்கு முன் பல நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. ஆலயப் பிரவேச மசோதா, விவசாயிகள் கடன் குறைப்பு மசோதா, மதுவிலக்குச் சட்டம் போன்ற பல புரட்சிகரமான சட்டங்கள் இங்கே நிறைவேறி இருக்கின்றன. இந்த மசோதா அவைகளில் எந்த விதத் திலும் குறைந்தது அல்ல. கிராமவாசிகளுக்கு அதிகாரம், அவர்களிடத்தில் நிர்வாகம் என்ற விஷயம் அவர்கள் கனவிலும் அறியாதவர்கள். அவர் களிடத்திலேயே எல்லா பொறுப்பும் கொடுக்கப்படுகிறது. எல்லாவற்றையும் அவர்களே நிர்வகிக்கிற நிலையில் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக் கிறது. அதனால் இதை நாம் அனைவரும் வரவேற்கக் கடமைப்பட்டிருக் கிறோம். கிராம வாசிகளின் நலனைப் பேணுவதற்காகவே இது ஏற்பட்டது. அபிவிருத்தித் திட்டம் போன்ற பிர்க்கா அபிவிருத்தித் திட்டம் நமது சென்னை ராஜ்யத்தில்தான் முதல் முதலில் கொண்டு வரப்பட்டது. கனம் ப்ரகாசம் அவர்கள் முதல் மந்திரியாக இருந்த காலத்தில் மூன்று கோடி ரூபாய் இதற்கு என்று ஒரு நிதியாக ஒதுக்கி வைத்து இந்தத் திட்டத்தை வகுத்துக் கொடுக்கும்படியாக மகாத்மா காந்தியை அவர் நெருங்கி, அதன் பிறகு காந்தியடிகளால் தயாரிக்கப்பட்ட ஒரு திட்டத்தை அதாவது பிர்க்கா அபிவிருத்தித் திட்டத்தைக் கொண்டுவந்து இங்கே நடத்தியதை நாம் மறந்திருக்க முடியாது.

இதில் அடிப்படையான அம்சம் என்னவென்றால் கிராமவாசிகள் தங்கள் தேவைகள் முழுவதையும் தாங்களே தேடிக்கொள்வதற்கான முறையில் இந்தத் திட்டம் கொண்டுள்ளது என்பதை நாம் கருத்தில் வைத்துக்கொண்டால் அந்த பிர்க்கா அபிவிருத்தி திட்டத்தின் மூலமாக வந்திருக்கிற இந்த அபிவிருத்தி திட்டம், இந்த இலாகா உத்யோகஸ் தர்கள், கிராம பஞ்சாயத்து இவைகள் சேர்ந்து செய்கிற காரியம், திட்டம் இந்த பஞ்சாயத்து " பில் ". இது எந்த அடிப்படையில் என்ன விஷயங்கள்

[Sri A. Vedarathnam] [23rd September 1958

அமைந்திருக்க வேண்டுமென்றால் எதெற்கெடுத்தாலும் இப்பொழுது மாகாண அரசாங்கத்தையோ அல்லது மத்திய அரசாங்கத்தையோ, அல்லது பிறருடைய உதவியையோ நாடிக்கொண்டு, அல்லது வெளி உதவி எப்பொழுது இதற்குக் கிடைக்கும் என்று இருக்கிற அந்த மனப்பான்மை மாறி தங்கள் குறையை தாங்களே நீக்கிக்கொள்வது என்ற அந்த தை யத்தை, ஊக்கத்தை, அந்த உற்சாகத்தை அடைகிற ஒரு நிலையை உண்டாக்க வேண்டியதுதான் இதனுடைய முக்கியமான அம்சம். இந்த மசோதாவில்கூட அதைப்பற்றி 65-No. என்ற பகுதியில் கிராம கைத் தொழில்கள் எல்லாம் இந்த பஞ்சாயத்துக்கே விடப்பட்டிருக்கிறது. பொதுப் படையாக இந்தக் கைத்தொழில் அபிவிருத்தி கிராம பஞ்சாயத்துக்களுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் அந்த அடிப்படையில் பிர்க்கா அபிவிருத்தி திட்டம் எந்த லட்சியத்தோடு எந்த நோக்கத்துடன் அமைக்கப்பட்ட தோ அந்த லட்சியத்துடன் நோக்கத்துடன் இது இருக்கிறதாகத் தோன்ற வில்லை. இந்த மசோதாவைத் தயார் செய்த கனம் அங்கத்தினர்கள், கனம் மந்திரி அவர்கள், குறிப்பாக காரியதரிசி அவர்கள் எல்லோரும் ஒரு விஷயத்தை கவனத்திற்குக் கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த முயற்சியில் கிராம சுய தேவை பரிட்சையை குஜராத் மாகாணத்தில் வேடச்சி கிராமத்தில் ஜகத்ராம் என்பவர்—இவர் காந்தி பக்தர், நிர்மாண ஊழியர், சிறந்த தேச பக்தர், சிறந்த பணி யாற்றுகிறவர்—இதை அனுஷ்டித்துப் பார்த்து இருக்கிறார். அவர் என்ன செய்தார் என்றால், அந்த கிராமத்திலுள்ள பொருள்களில் சென்ஸஸ் அதாவது கணக்கை எடுத்து அந்த கிராமத்திற்கு இருக்கிற பற்றாக்குறை என்ன என்பதையும், அந்த கிராமத்தில் அதிகப்படியாக எது உற்பத்தி யாகிறது என்பதையும் கணக்கெடுத்து அதைப்பற்றி பரிசீலனை செய்து பற்றாக்குறையை அதிகமாக உற்பத்தி செய்துகொண்டு உபரியாக இருப் பதைக் குறைத்துக்கொண்டு வேலை செய்வதற்குத் திட்டம் வகுத்து அதன்படி வேலை செய்து அது சாத்தியம் என்று செய்து பார்த்து ஒரு அறிக்கை யையும் வெளியிட்டிருக்கிறார். அந்த அளவில் ஒரு கிராமம் தன்னு டைய சுய தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளலாம் என்றும் கண்டு பிடித்திருக்கிறார். அவருடைய அறிக்கை " வேடச்சி ரிப்போர்ட் " என்ற பெயரில் வெளியாகி இருக்கிறது. கனம் மந்திரி அவர்களும், முக்கியமாக காரியதரிசி அவர்களும் அதை எடுத்துக்கொண்டால் இந்தத் திட்டம் இன்னும் சிறந்த முறையில் அமைத்து சுய தேவை அடிப்படையில் இதை செய்து கொள்ளலாம். அந்த அடிப்படையில் ஊக்கம் காட்ட வேண்டும் என்று நான் எதிர்பார்க்கிறேன். இதற்கு நாம் வழி காட்ட வேண்டும். இது நம்முடைய முக்கியமான நோக்கமாக இருக்க வேண்டும்.

இந்த பஞ்சாயத்து " பில் " லில் சில முக்கியமான விஷயங்களைக் குறிப்பிட்டிருக்கிறார்கள். பஞ்சாயத்து கவுன்சில்களுக்குப் பஞ்சாயத்தில் இருக்கிற உறுப்பினர்கள் பிரதிநிதியாக வர வேண்டுமா, பஞ்சாயத்து போர்ட் தலைவர் வரவேண்டுமா என்ற இரண்டு விதமான அபிப்பிராயம் இங்கே இருந்து வருகிறது. பஞ்சாயத்து தலைவருக்கு கவுன்சிலில் சரியான மதிப்பு செல்வாக்கு இருக்குமா அல்லது பஞ்சாயத்து கவுன்சில் நிறை வேற்றுகிற காரியங்களை தன்னுடைய கிராமங்களுக்குத் தன்னுடைய பஞ் சாயத்தில் நிறைவேற்றுவதற்குச் சாதகமாக இருக்குமா என்றெல்லாம் சொல்லப்படுகிறது. சாதாரணமாக அப்படிச் செய்ய முடியும், அவருக்கு செல்வாக்கு இருக்கும், அவரால் எல்லா காரியங்களையும் தன்னுடைய பஞ்சாயத்து பிராந்தியத்தில் நிறைவேற்றிக்கொள்ளலாம் என்று சொல்லு கிறார்கள். இப்படிச் சிலருடைய அபிப்பிராயம். இன்னும் சிலருடைய அபிப் பிராயம் என்னவென்றால் அங்கே தேர்தலில் வெற்றி அடையாமல் இன்னும் அங்கே இருக்கக்கூடியவர்களிடம் செல்வாக்கு இல்லாமல் பஞ்சாயத்தில் கலந்து கொள்ள விருப்பம் இல்லாது இருப்பவர்களுக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்க வேண்டுமா என்பது இன்னொரு சாராருடைய கருத்து. ஒரு பஞ்சாயத்துத் தலைவர் கவுன்சிலின் உறுப்பினராக இருந்தால் தன்னுடைய பஞ்சாயத்து நன்றாக நடைபெற வேண்டுமென்ற எண்ணத்தில் பஞ் சாயத்துக்கு ஆக வேண்டிய காரியத்தைக் கவுன்சிலுக்குக் கொண்டு வந்து

23rd September 1958] [Sri A. Vedarathnam]

அங்கே அவைகளை நிறைவேறச் செய்து அதை மீண்டும் தன்னுடைய பஞ்சாயத்தில் நிறைவேற்றுவதற்கு முடியுமே அல்லாது வேறு ஒரு உறுப்பினரை அமைத்தால், அதிலும் தோற்றுப்போனவரை அமைத்தால் பஞ்சாயத்தில் விருப்பம் சொல்லாமல், எதற்கு எடுத்தாலும் குறை சொல்லிக்கொண்டே இருப்பார், பஞ்சாயத்து சரியாக நடைபெறவில்லை என்று சொல்லிக்கொண்டே தான் இருப்பார். ஆக்க வேலைகளுக்கு அவர் வழி காட்டுபவராக இருக்க மாட்டார். இதை மாற்றுவதற்கு ஒரு சந்தர்ப்பம் அளிக்க வேண்டும். பஞ்சாயத்துத் தலைவருக்கு ஒரு துணைத் தலைவரை அமைத்தால் பஞ்சாயத்து தலைவர் கவுன்சிலுக்கு போக முடியாத காலத்தில் மற்றவர் போகக்கூடாது என்று நினைக்கும் காலத்தில் துணைத் தலைவருக்கு அந்த அதிகாரத்தைக் கொடுத்து அனுப்பிக்கலாம். அப்படி துணைத் தலைவருக்கு அந்த அதிகாரத்தைக் கொடுக்கலாமேயன்றி வேறு ஒரு உறுப்பினரை அதற்காகத் தேர்ந்தெடுத்து அனுப்பினால் அது வேறு வழிகளுக்கு உதவியாக இருக்குமேயல்லாது பஞ்சாயத்தினுடைய நன்மைக்கு அது உதவிகரமாக இருக்காது என்ற விஷயத்தை நான் குறிப்பிட விரும்புகிறேன். பஞ்சாயத்தில நடைபெறவேண்டிய வேலைகளனைத்தும் அந்தப் பஞ்சாயத்தின் மூலமாகத்தான் நடைபெறவேண்டுமேயல்லாமல், அதைப் பஞ்சாயத்துக் கவுன்சிலுக்கோ அல்லது அங்கு இருக்கும் கமிஷனர் மேற்பார்வையிலோ நடைபெறவேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டால் அது கிராமத்திற்குப் பலன் தருவதாக இருக்காது. எத்தனையோ குறைபாடு உடையதாக ஆகும். கிராமத்தில நடைபெறும் அத்தனை வேலையும் கிராமப் பஞ்சாயத்து மூலமாகவே நடக்கும்படியாக வகைசெய்யவேண்டுமேயல்லாமல் அது மற்றவர்களால் நடைபெற்றால் அந்த வேலை கிராமத்திற்குப் பலன் தராது என்று தெரிவித்துக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கின்றேன்.

* Sri B. DORAISAMI REDDIAR : கனம் சபாநாயகர் அவர்களே, பஞ்சாயத்து மசோதாவிலுள்ள சில திருத்தங்களைப் பற்றியும் மற்ற அதிகாரங்கள் பற்றியும் ரொம்பவும் விரிவாக ஒவ்வொருவரும் பேசினார்கள். ஆனால், சற்று முன்பாகப் பேசிய காங்கிரஸ் அங்கத்தினர் திரு. டி. பி. எழுமலை அவர்கள், எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் எல்லோருக்கும் ஒரு ஆசிரியர் மாதிரி புத்தி சொல்லும் முறையில் எங்களுக்குப் புத்தி புகட்டியது மிகவும் வரவேற்கத்தக்கது தான். ஆனால், அது எப்படி இருந்தது என்றால், எஸ். எஸ். எல். ஸி. மாணவர்களுக்கு ஹையர் கிரேடு ஆசிரியர் பயிற்சி கொடுப்பது மாதிரி அவர் எங்களுக்குப் புத்தி புகட்டினார். அதோடு மட்டுமல்லாமல், அமைச்சர் கொண்டுவரும் சட்டங்கள் எல்லாவற்றுக்கும் நாங்கள் 144 தடை உத்தரவு போடுவதாகச் சொன்னார். அமைச்சர்கள் கொண்டுவரும் சட்டங்கள் எல்லாவற்றுக்கும் அவர்கள் தான் தகராறு இல்லாமல் நிறைவேற்றி வைப்பதாகவும், நாங்கள் எப்பொழுதுமே இடையூறு செய்பவர்களாகவும் சொல்லுகிறார். நாங்கள் அம்மாதிரி அமைச்சர் கொண்டுவரும் சட்டங்களுக்கு இடையூறு செய்யவேண்டுமென்ற கருத்து உடையவர்கள் அல்ல. அதில் உள்ள குறைபாடுகளை, எடுத்துக்காட்டி செய்யவேண்டிய மாறுதல்களைச் செய்யும்படியாகச் சொல்கிறோமே தவிர, சட்டத்தை அப்படியே நிராகரித்துவிட வேண்டுமென்ற எண்ணம் உடையவர்கள் நாங்கள் அல்ல.

அதுவும் தவிர, ஜில்லா போர்டு விஷயமாகச் சில கருத்துக்களைச் சொன்னார்கள். ஜில்லா போர்டு பிரசிடெண்ட் இருந்தபோது ஏற்பட்ட செலவைக் காட்டிலும், கலெக்டர் தலைவராக வரக்கூடிய கவுன்சிலில் செலவுகள் மிகவும் குறைவாக இருக்கும் என்றும் அவர் சொன்னார். என்ன காரணத்தினால அவர் அப்படிச் சொன்னார் என்று எனக்குத் தெரியவில்லை. ஜில்லா போர்டு அங்கத்தினராக இருந்தபோது ஏதாவது சம்பளம் இருந்ததா ? கலெக்டர் தலைவராக வருகிறபோது சம்பளம் இல்லாமல் போய்விட்டதா ? எந்தக் காரணத்தினால் அவர், முன்பு செலவு அதிகமாக இருந்ததாகவும், இப்பொழுது குறைந்துவிட்டது என்று

சொல்கிறார் என்று எனக்குப் புலப்படவில்லை. ஜில்லா போர்டு கூட்டத்திற்கு அவரும் போய்த்தான் இருப்பார். ஆனால், காங்கிரஸ் அங்கத்தினர் என்ற ஹோதாவில் அவர் சொல்லும் வேலையைக் கலெக்டர் செய்து முடித்துவிடுவார் என்ற எண்ணத்துடன், அவர், கலெக்டர் தலைமை வகிக்கக்கூடிய ஸ்தாபனம் மிகச் சிறப்பானது என்று புகழ்ந்து பேசினார் என்று நினைக்கிறேன்.

ஆனால், எந்த நிலையில் ஜில்லா போர்டு இருக்கிறதென்றால், அங்கே அபிஷியல் மெம்பர்கள் என்றும், நானபிஷியல் மெம்பர்கள் என்றும் இருவகைப்பட்டவர்கள் இருக்கிறார்கள். நானபிஷியல்களாக இருக்கும் அங்கத்தினர்கள் ஒன்றிரண்டு கருத்துக்களைக் கலெக்டரிடம் சொன்னால், அவர் என்ன சொல்கிறார் ? " நீங்கள் ஆலோசனைக் கமிட்டி அங்கத்தினர்களாகையால் நீங்கள் சொல்லும் வார்த்தைகளையெல்லாம் நாங்கள் எடுத்துக்கொண்டு நடந்தால், எங்களை கவர்ன்மெண்டார் சும்மா விடமாட்டார்கள் ; அவர்களுக்கு நாங்கள் பயந்து நடக்கவேண்டிய நிலையில் இருப்பவர்களாகையால், நீங்கள் சொல்பவைகளில் சிலவற்றைச் செய்ய முடியாத நிலையில் உள்ளவர்களாக இருக்கிறோம் ; காரணம் நீங்கள் நானபிஷியல்களாக இருக்கிறீர்கள் ; நாங்கள் கவர்ன்மெண்டுக்குச் சாதகமாகச் செய்யவேண்டியவர்கள் ; பொதுமக்களுக்குச் சாதகமாகச் செய்ய வேண்டியிருந்தாலும், கவர்ன்மெண்டுக்கு விரோதமாக இருக்கும் எம். எல். ஏ.க்கள் இருக்கும் ஸ்தாபனங்களில் நாங்கள் தாலூகா காங்கிரஸ் கமிட்டி மெம்பர், டிஸ்ட்ரிக்ட் காங்கிரஸ் கமிட்டி மெம்பர் ஆகிய காங்கிரஸ்காரர்கள் சொல்கிறமாதிரிதான் கேட்டு ஆக வேண்டியிருக்கிறது" என்று சிலர் நேரில், தனிப்பட்ட முறையில் பேசும்போது சொல்கிறார்கள். அவர்கள் சொல்வதில் ஆட்சேபணை இல்லை. " அம்மாதிரிதான் நாங்கள் நடக்க வேண்டியிருக்கிறது : உத்தியோகம் தான் முதல் கடமை : அதை விட்டுவிட்டு உங்கள் பேச்சைக் கேட்டால் நாங்கள் எப்படிப் பிழைப்பது ? " என்று அவர்கள் கேட்கிறார்கள். ஜில்லா போர்டில் நிலைமை எப்படி இருக்கிறதென்றால், பொம்மலாட்டம் மாதிரி இருக்கிறது. இப்பொழுது சினிமா வந்துவிட்ட பிறகு பொம்மலாட்டம் என்பது போய்விட்டதென்றாலும், ஜில்லா போர்டில் இன்னும் இருக்கிறது. எப்படித் திரை மறைவில் நின்று கொண்டு, பொம்மைகளில் கட்டியிருக்கும் கயிறுகளை ஆட்டுகிற ஒருவன் உயிர் நிலைபோன்று இருக்கிறானோ, அதுபோல்தான் அட்வைசரி கமிட்டியைப் பொருத்தவரையில், கலெக்டர் பொம்மலாட்டக்காரன் மாதிரி இருந்துகொண்டு, அட்வைசரி கமிட்டி மெம்பர்கள் பொம்மைகளாக இருக்க வேண்டிய நிலை இருக்கிறது. டிஸ்ட்ரிக்ட் போர்டு பிரசிடென்ட் ஸ்தானத்தில் இருக்கும் கலெக்டர் பொம்மைகளாகிய மெம்பர்களை ஆட்ட சக்தி உள்ளவர்களாக இருக்கிறார். அட்வைசரி கமிட்டி என்ற முறையில் டிஸ்ட்ரிக்ட் போர்டு நடக்கிறது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கும் கமிஷனர் மூலமாக விட்டுவிட்டால் அதே நிலைதான் உண்டாகும். அப்படியானால் பஞ்சாயத்து போர்டு என்றும், அதில் மெம்பர்கள் என்றும், தலைவர் என்றும் எதற்காக இருக்கவேண்டும் ? பஞ்சாயத்தே இல்லாமல், ஒவ்வொரு பிர்க்காவுக்கும் ஒவ்வொரு கமிஷனரை நியமித்து அவர் மூலமாக எல்லா வேலைகளையும் விட்டுவிட்டாலும் பாதகம் இல்லை. ஏதோ " பஞ்சாயத்து போர்டு மெம்பர் " அல்லது " பஞ்சாயத்து போர்டு தலைவர் " என்று வீட்டிலோ மற்ற இடங்களிலோ சொல்லிக்கொள்வதற்கு வேண்டிய அளவு மட்டும், பெயரளவில் மட்டும் சொல்லிக்கொள்ளும் அந்த நிலை இருக்கக்கூடாது. அத்துடன் எல்லா அதிகாரங்களும் ஒரே இடத்தில் குவிகின்ற முறையினும் இருக்கக்கூடாது. சோஷலிசத் தன்மையில் எல்லாப் பொது ஜனங்களுக்கும் அதிகாரம் இருக்கவேண்டுமென்ற கருத்தோடு இருந்தால், பஞ்சாயத்து மெம்பர்களுக்கும், பஞ்சாயத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட ப்ரசிடென்டுக்கும் அதிகாரம் இருந்தால்தான் கிராமத்திற்கு வேண்டிய வேலைகளைச் செய்ய முடியும். ஜில்லா கலெக்டராக இருப்பவருக்கு அதிகாரம் இருந்தால், அவர் வடாற்காடு ஜில்லாவை விட்டு வேறொரு ஜில்லாவுக்கு மாற்றல் ஏற்பட்டுப் போய்விட்டார் என்று வைத்துக்கொண்டால், பிறகு அந்த ஜில்லாக் குறைகளை அவர் கவனிக்க

23rd September 1958] [Sri B. Doraisami Reddiar]

வேண்டிய அவசியம் இல்லை. எக்ஸிக்யூடிவ் ஆபீசராகவோ, கமிஷனராகவோ இருப்பவர்களும் அப்படித்தான். அவர் பதவி வகித்துவந்த அந்தப் பிரதேசத்தின் நிலைமையைப்பற்றி, அவர் அங்கிருந்து வேறொரு இடத்திற்கு மாற்றல் ஏற்பட்டுப் போய்விட்ட பிறகு அவருக்குக் கவலை இல்லை. ஆகவே, ப்ரசிடென்டுக்கு அதிகாரம் இருந்தால், அவர் தொடர்ந்து கவனித்து வர வசதி இருக்கிறது. ஆகவே, அதிகாரமெல்லாம் ப்ரசிடென்டுக்கு இருக்கவேண்டும் என்று கேட்டுகொண்டு, கனம் சபா நாயகர் அவர்கள் நேரம் ஆவதைக் குறித்து மணி அடிக்கத் தயாராக இருப்பதால், அவர் மணியை அடிப்பதற்கு முன்பாக, என்னுடைய சிற்றுரையை இதோடு முடித்துக்கொள்ளுகிறேன்.

* SRI P. G. MANICKAM : மதிப்பிற்குரிய சபாநாயகர், அவர்களே, இந்த மசோதாவை ஆதரித்து ஒரு சில சங்கதிகளைச் சொல்ல விரும்புகிறேன். இம்மசோதாவானது உருவான முறையில் செயலாற்றப்பட்டால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முழுவதும் உருவான முறையில் பயன் கொடுக்கும் என்பது எல்லோருடைய அபிப்பிராயமும் ஆகும். ஆகையால், இம் மசோதா சம்பந்தப்பட்ட பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்கள் நியாயமான முறையில் நடைபெறுவதற்குரிய சட்ட திட்டங்களை வகுக்கவேண்டியது சட்டசபை அங்கத்தினர்களாகிய நம் போன்றருடைய பொறுப்பாகும். ஆகவே, பொதுவாக, மொத்த அபிப்பிராயம் எவ்வாறு இருக்கிறதென்றால், அதிகாரிகளுக்குள்ளும் மெம்பர்களுக்குள்ளும் ஒரு ஒத்துழைப்பு அத்தியாவசியம். அங்கு நடைபெறும் நிர்வாகமானது மெம்பர்களுக்கும் அதிகாரிகளுக்கும் உள்ள சம்பந்தத்தைப் பொருத்துத்தான் இருக்கிறதென்பதும் நமக்குத் தெரிந்த விஷயம். இதுபற்றி நாம் சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். இந்தச் சிரத்தைதான் கிராம மக்களுக்கு நன்மை பயக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

பஞ்சாயத்திலே ஹரிஜன மெம்பர்களுடைய எண்ணிக்கை விஷயமாக சில சங்கதிகளைச் சொல்ல விரும்புகிறேன். ஒவ்வொரு பஞ்சாயத்து போர்டிலேயும் ஹரிஜனங்களுக்கு ஸ்தானங்கள் "ரிசர்வ்" செய்யப்பட வேண்டுமென்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இது இந்திய அரசியல் சட்டத்திற்கு உட்பட்டதாகும். இருந்தாலும், கோயமுத்தூர் ஜில்லாவிலே 42 பஞ்சாயத்து போர்டுகளில் இதுவரை ஸ்தானங்கள் ஒதுக்கப்படவில்லை. அதன் காரணம் என்ன என்று தெரியவில்லை. ஆகையால், சர்க்கார் ஏன் அங்கே அந்த ஸ்தானங்களை ஒதுக்கவில்லை, அதற்கான காரணங்கள் என்ன என்பதைத் தெரிவிக்கும்படியாக நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

இந்த மசோதாவிலே 15-வது ஷரத்து கூறுவதாவது : "ஷெட்யூலில் கண்ட ஜாதிகளைச் சேர்ந்த அங்கத்தினர்களுக்காக ஸ்தானங்களை ஒதுக்கி வைப்பது. (1) ஒவ்வொரு பஞ்சாயத்திலும் இன்ஸ்பெக்டரானவர் நிர்ணயிக்கப்படக்கூடிய விதிகளுக்குட்பட்டு, விளம்பரம் பிரசுரித்து அதன் மூலமாக, அந்தக் கிராமத்திலே அல்லது பட்டணத்திலே ஷெட்யூலில் கண்ட ஜாதியார்களின் ஜனத்தொகையைக் கிரமப்படி கவனித்து, அந்த ஜாதிகளைச் சேர்ந்தவர்களுக்காகத் தாம் தகுதியென்று நினைக்கிற எண்ணிக்கையுள்ள ஸ்தானங்கள் எவற்றையேனும் ஒதுக்கிவைக்கலாம்."

இப்படியாக அந்த ஷரத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இதையும் ஷெட்யூல் ஜாதியினருடைய கமிஷனர் அவர்கள் தெரிவித்திருக்கிறார்கள். ஜனத்தொகை கணக்கெடுத்து, அதில் ஹரிஜனங்களின் ஜனத்தொகையையும் கணக்கெடுத்து, அதன் பிரகாரம்தான் பஞ்சாயத்து போர்டில் ஸ்தானங்கள் ஹரிஜனங்களுக்காக ஒதுக்கப்படுகின்றன. சட்டமும் அதைத்தான் சொல்கிறது. அப்படியிருந்தும் 42 இடங்களிலே இவர்களுக்கென்று ஸ்தானங்கள் இல்லையென்றால் இதனுடைய விவரம் தெரியவில்லை. ஜனத்தொகை அதிகப்படியாக இருந்தால் அதற்கு எப்படி ஸ்தானம் ஒதுக்கவேண்டும் என்பதற்கு இந்தச் சட்டம் இயற்றப்பட்டிருக்கிறது.

[Sri P. G. Manickam] [23rd September 1958

ஆனால் ஹரிஜனங்கள் கொஞ்சமாக இருந்தால் அதற்காக அங்கு ரிசர்வ் ஸ்தானங்களை எடுக்கவேண்டிய அவசியம் இல்லை. ஆகையால், உடனடியாக 42 பஞ்சாயத்து போர்டுகளிலும் ஹரிஜனங்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கும்படியாக கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக யூனியன் பஞ்சாயத்து கவுன்ஸிலிலே ஹரிஜனங்களுக்கு மூன்று ஸ்தானங்கள் ஒதுக்கப்பட்டிருப்பது கண்டு நான் மகிழ்ச்சியுறுகிறேன். காரணம் இந்த ஏற்பாடு இல்லை விட்டால் வேறு எந்த அடிப்படையிலும் அவர்களால் வரமுடியாத நிலைமை ஏற்படும். ஆகவே மூன்று ஸ்தானங்கள் ஒதுக்கி வைத்துக் கொடுப்பது சாலப் பொருந்தும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். ஆனால் ஜில்லா கவுன்ஸிலிலே ஹரிஜனங்களுக்குப் பிரதிநிதித்துவம் இல்லை என்று தெரிவித்துக்கொள்கிறேன். இருந்தாலும் அங்குள்ள ஸ்டாண்டிங் கமிட்டியிலே ஹரிஜனங்களுக்கும் ஸ்தானங்கள் ஒதுக்கப்படவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI T. T. DANIEL: Mr. Speaker, Sir, while discussing this Bill, I like to point out some facts for the kind consideration of the Government. The object of the Bill is to liquidate the district boards and to distribute the powers of the district boards among the panchayats and the panchayat unions. While liquidating the district boards, the most important point that we have to consider is this, namely, what we should do regarding the high schools managed by the district boards. Out of a total of 1,107 high schools in the State, 420 high schools are managed by the district boards and 47 high schools are managed by Government. So far as the high schools are concerned, I would suggest that it is better and proper that district board high schools are taken over by the Government and managed by them so that there might be effective and efficient administration of the high schools. In view of the fact that in this State there are only 47 high schools under the direct control and management of the Government, I do not think it will be any additional burden to the Education Department to take over these 420 district board high schools. The suggestion by Government that they might be handed over to the managemnt of *ad hoc* committees constituted by Government, will I feel only create vestiges of something like district board control again. This will create unnecessary financial commitment to the Government.

Coming to the question of elementary schools, I agree with the idea of the Government that the elementary schools must be handed over to the panchayats. Only if there is a local body taking interest in the admission and attendance of children in the elementary schools, there will be encouragement to the parents to send their children to the elementary schools. So far as this position is concerned, the existing condition in the Kanyakumari district completely differs from that of the other districts in this State. We have got the compulsory primary school scheme in operation in that district which ensures the standard level of attendance at the primary schools. So, in extending this Act to the Kanyakumari district, I would make a humble suggestion to the Government that the primary schools should be only under the management of the

23rd September 1958] [Sri T. T. Daniel]

Government and should never be handed over to the panchayats there, because, the standard of attendance that Government require has already been achieved so far as that district is concerned.

Coming to the question of formation of panchayats, I would point out that in this Bill, the village is taken more or less as a unit. But in the Kanyakumari district the revenue village is taken as a unit for the formation of panchayats. It is only on this basis that panchayats are formed there. This creates a difficulty in the formation of the panchayat union, according to the provisions of this Bill. The National Extension Blocks area in this district consists of only four panchayats, and if we give representation on the panchayat union council at the rate of one member for each panchayat, there will be only four members for each panchayat union council. Out of these four members, two have to be elected. One has to be Chairman and the other has to be Vice-Chairman. Only two members will be left in the panchayat union council and that will affect the working of the panchayat union council. I would therefore suggest that so far as the formation of panchayats is concerned, only the revenue village can be taken as a feasible unit. The representation for each panchayat in the Kanyakumari district should be increased according to the basis of the population. If that is done every panchayat is constituted in the Kanyakumari district on the basis of the revenue village being a unit, each panchayat can send to panchayat union council four or five members as its representatives. Then, the difficulty of having only very few members on the panchayat union council can be easily got rid of.

Coming to the formation of the union council, I would suggest that the members of the Upper House should be included.

There is provision in clause 189 of the Bill for the extension of this legislation to the Kanyakumari district by notification. I have my own doubt whether by notification the provisions of this Act can be extended, in view of the fact that we have to make amendments to the very fundamental provisions of this Act, before this Act is extended to that district. I suggest that there should be a clause in this Bill that for the present the Act should be extended to the whole of the Madras State excluding the Kanyakumari district and that the Government should bring an amending Bill for making amendments to the parent Bill taking into consideration all the existing peculiar conditions of that district. Only after that the bill that we are now passing, should be extended to the Kanyakumari district. I have my own doubts that any . . .

(The Speaker sounded the gong and the Member resumed his seat.)

**Sri N. MARUDACHALAM :** கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது கொண்டு வந்திருக்கும் பஞ்சாயத்து மசோதாவானது, இப்போது நடைமுறையில் நடந்து கொண்டிருக்கும் பஞ்சாயத்து மசோதாவை விட அதிக முன்னேற்றம் அடைந்திருப்பதாகத் தெரிய

வில்லை. அதிலுள்ள ஷரத்துக்களே இதில் அடங்கியுள்ளன. இரண்டொரு புது ஷரத்துகளும் இருக்கலாம். சிறு சிறு பஞ்சாயத்துகளாக இருந்ததை இப்போது யூனியனாக அமைக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த யூனியன் பஞ்சாயத்து கவுன்ஸிலிலே எம்.எல்.ஏ.க்கள் இருப்பார்கள் என்று சொல்லப்படுகிறது. ஆனால் அவர்களுக்கு வோட்டுரிமை கிடையாது. அவர்கள் தங்கள் அபிப்பிராயத்தைச் சொல்லலாம். அந்த அபிப்பிராயத்தை ஆபீசர்கள் ஏற்றுக்கொள்ளாமல் தள்ளியும் விடலாம். இப்படி பெருவாரியான மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட எம்.எல்.ஏ. க்களுக்கு எவ்வித மதிப்பும் இல்லாமல், உரிமை இல்லாமல் அந்தக் கவுன்ஸிலில் இருக்க செய்வது சரியல்ல, அவர்களுக்கு வோட்டுரிமை இருப்பது மிகமிக முக்கியமானதாகும். மேலும் பஞ்சாயத்து யூனியனில் வோட்டுரிமை இல்லாத நபரையும் தேர்ந்தெடுக்கலாம் என்று இருக்கிறது. இப்படித் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் மிராசுதார்கள், பணக்காரர்கள் தான். இவர்களால் வேலை நல்லமுறையில் நடைபெறாது என்பது என்னுடைய அபிப்பிராயம். ஆகவே இவர்களைத் தேர்ந்தெடுப்பது ஹரிஜனப் பிரதிநிதியாக இருக்க வேண்டுமென்று குறிப்பிடவேண்டும். அதோடு பஞ்சாயத்து தேர்தல் நடைபெறும்போது "தான் தான் தலைவராக வரவேண்டும். தான் தான் தலைவராக வர வேண்டும்" என்று இரண்டு பேர் கங்கணம் கட்டிக் கொண்டு போட்டியிடும்போது பஞ்சாயத்து அங்கத்தினர்கள் கடத்திக் கொண்டு போகப் படுகிறார்கள். பலயிடங்களில் இவ்வாறு கடத்திக்கொண்டு போகப்படுகிறவர்கள் தாழ்த்தப்பட்டவர்களாகவே இருக்கிறார்கள் என்பதைக் கவனிக்கவேண்டும். சாதி இந்துக்கள் கடத்திக்கொண்டு போகப் படுவதில்லை. குறிப்பாக சின்னத்தடாகம் என்ற நஞ்சுண்டாபுரத்தில் மூன்று ஹரிஜனங்கள் இவ்வாறு கடத்திக் கொண்டு போகப்பட்டார்கள். அவர்களுடைய குடும்பங்கள் போலீஸ் ஸ்டேஷனில் வந்து கதறினார்கள். எவ்வித நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளப்படவில்லை. இப்படி ஆள் கடத்தல் நடந்தால் அந்தத் தலைவர் தேர்தல் செல்லாது என்று சட்டத்தில் செய்ய வேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன். அப்படி குறிப்பிட்டால் தான் கடத்திக் கொண்டுபோவது நிற்கும். அது மாத்திரம் அல்ல.

12.10 p.m. ஒவ்வொரு பஞ்சாயத்திலும் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. நடுத்தரப் பள்ளிகளை நடத்தும் பொறுப்பை பஞ்சாயத்திற்கே விட்டுவிட வேண்டும். அப்படி இருந்தால் தான் பள்ளிகள் நன்றாக நடக்கும். மின்சார இலாகாவைப்பொறுத்த வரையிலும் கூட இம்மாதிரியான ஏற்பாடே இருக்க வேண்டும். வரி போடும் அதிகாரம் கூட பஞ்சாயத்திற்கே இருந்தால், நன்றாக இருக்கும். பள்ளிக்கூடம் நடத்துவதற்கோ வேறு ஏதாவது காரியத்திற்கோ ஒரு இடத்தை வாங்க வேண்டுமென்றால், அந்த யோசனையை மட்டும் தீர்மானமாக நிறைவேற்றித் தெரிவிப்பதற்குத் தான் பஞ்சாயத்து சபைக்கு அதிகாரம் இருக்கிறது. அந்த இடத்தை வாங்குவதற்கு எவ்வளவு பணம் செலவழிக்கலாம் என்று நிர்ணயம் செய்வதற்கு பஞ்சாயத்து சபைக்கு அதிகாரம் இல்லை. அதற்கு தாசில்தாருக்குத் தான் அதிகாரம் இருக்கிறது. செலவை தாசில்தார் நிர்ணயித்த பிறகு தான் அந்த இடத்தை விலைக்கு வாங்க முடியும். இப்படிப்பட்ட நிலையில் பஞ்சாயத்து சபைகள் இருக்கக்கூடாது. பஞ்சாயத்துக்களின் தேவைகளை பஞ்சாயத்து சபைகளே பூர்த்தி செய்யக்கூடிய நிலையில் இருக்க வேண்டும். மசோதா அந்த சபைகளுக்கு அதற்குரிய அதிகாரங்களைக் கொடுக்க வேண்டும். பஞ்சாயத்து சபைகள் அந்த நிலையிலிருப்பது தான் கிராம சீரமைப்பிற்கு ஒத்ததாக இருக்கும். அப்படியில்லாமல் பஞ்சாயத்து சபைகள் பஞ்சாயத்து யூனியனில் பொம்மை சர்க்கார் மாதிரி இருந்துகொண்டு, தன் அபிப்பிராயங்களை மாத்திரம் சொல்லிக்கொண்டிருந்தால் அது சரியான ஏற்பாடாக இருக்காது.

* **Sri M. R. KANDASWAMI MUDALIYAR** : கனம் தலைவர் அவர்களே, இந்த பஞ்சாயத்து மசோதாவை நான் வரவேற்கிறேன். இந்த மசோதா மிகவும் முன்னேற்றமான முறையில் அமைந்திருக்கிறது. கிராமங்களில் கிராம ராஜ்யமும் ராம ராஜ்யமும் சேர்ந்த ராஜ்யம் ஏற்படுவதற்கு வழிகோலக்கூடிய மசோதாவாக அமைந்திருக்கிறது. இந்த மசோதாவை மிகவும் பாராட்டுகிறேன், இது மிகவும் முக்கியமான

23rd September 1958] [Sri M. R. Kandaswami Mudaliyar]

மசோதா. இதைப்பற்றி நான் பேச ஆரம்பிக்கும்போது, பேசுவதற்கான அவகாசம் 10 நிமிஷங்களிலிருந்து 5 நிமிஷங்களாகக் குறைக்கப்பட்டிருக்கிறது. இது மாதிரியான மசோதாக்களைப் பற்றி விவாதிக்கும்போது எத்தனையோ அங்கத்தினர்கள் எத்தனையோ கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புவார்கள். அப்படியிருக்கும்போது, பேசுவதற்கு ஒவ்வொரு கனம் அங்கத்தினருக்கும் 5 நிமிஷ அவகாசம் கொடுப்பதற்குப்பதிலாக அவகாசமே கொடுக்காமலிருப்பது நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது.

**MR. SPEAKER** : பேசாமல் இருப்பதே நல்லது. பேச வேண்டுமென்று உங்களை நான் வற்புறுத்தவில்லையே

* **SRI M. R. KANDASWAMI MUDALIYAR** : பஞ்சாயத்துத் தேர்தல்கள் நடத்தும் முறையில் இப்போது பல தவறுகள் இருக்கின்றன. முன்பு வாக்குச் சீட்டுகள் வோட்டுப் சாவடி உத்தியோகஸ்தருக்கு நம்பர்களுடன் கொடுக்கப்பட்டன. எல்லா வோட்டுச் சீட்டுக் கட்டுகளிலும் சீரியல் நம்பர் இருக்கும். இப்போது வோட்டுச் சீட்டுகளில் நம்பர் இல்லை. இதன் காரணமாக பல தவறுகள் நடக்கின்றன. அதாவது வோட்டுச் சாவடியிலுள்ள உத்தியோகஸ்தர் தனக்கு வேண்டியவரிடம் கட்டுக்கட்டாக நிறைய வோட்டுச் சீட்டுகளைக் கொடுத்துவிடுகிறார். அவர் அந்த சீட்டுகளைத் தனக்கு வேண்டிய அபேட்சகரின் பெட்டியில் எல்லா வோட்டுச் சீட்டுகளையும் போட்டுவிடுகிறார். இதைக் கண்கூடாகக் கண்டிருக்கிறோம். வோட்டர்கள் ஜாபிதாவில் 700 பேர் தான் இருக்கிறார்கள். வோட்டுப் போட வந்தவர்கள் 600 பேர் தான். ஆனால், பெட்டிகளிலிருந்து வோட்டுச் சீட்டுகளின் மொத்த எண்ணிக்கை 800. சில இடங்களில் இப்படி தேர்தல்கள் நடந்திருக்கின்றன. இவை பற்றி புகார்களும் செய்யப்பட்டுள்ளன. ஆகவே தேர்தல்களில் இம்மாதிரியான தவறுகள் நடப்பதற்கு இடமில்லாத வகையில் விதிகளைத் திருத்தியமைக்க வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். இரண்டாவதாக, என் தொகுதியில் இரண்டொரு இடங்களில், பஞ்சாயத்து சபைத் தலைவர் தேர்தல் நடந்தபோது ஸ்தலத்திற்கு எலெக்ஷன் ஆபீசர் வரவில்லை. அவர் வராதபோதே தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். இவை சம்பந்தமாக இப்போது கோர்ட்டுகளில் வழக்குகள் தொடரப்பட்டிருக்கின்றன. இத்தகைய தவறுகள் இல்லாமல் நல்ல முறையில் தேர்தல்கள் நடத்தப்பட வேண்டுமென உத்தரவு போடவேண்டுமென சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். பஞ்சாயத்தின் ஒவ்வொரு உறுப்பினரிடமிருந்தும் கையெழுத்தை வாங்கியே தலைவர் தேர்தலை நடத்த வேண்டுமென்றும் உத்தரவு போட வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, 50 ரூபாய்க்கு மேற்படாத பணத்தொகை பற்றிய வழக்குகளை விசாரிப்பதற்கான உரிமை பஞ்சாயத்துகளுக்கு இருந்துவந்தது. அந்த உரிமையை பஞ்சாயத்திடமிருந்து இந்த மசோதா பறிக்கிறது. பஞ்சாயத்து கோர்ட்டில் வழக்கு நடப்பதுதான் நல்லது. ஏனென்றால் பஞ்சாயத்துக் கோர்ட்டிலுள்ளவர்கள் உள்ளூர் விவகாரங்களை நன்றாக அறிந்திருப்பார்கள். அவர்கள் நல்ல தீர்ப்பு அளிப்பார்கள். மேலும் டவுன்களில் உள்ள கோர்ட்டுகளுக்கு பஞ்சாயத்திலுள்ள ஜனங்கள் செல்ல வேண்டுமானால் அவர்கள் பிரயாணச் செலவு செய்ய வேண்டியிருக்கும். அந்தக் காரணத்தாலும், பஞ்சாயத்தில் கோர்ட்டை அமைப்பதற்கு மசோதாவில் வகை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

பஞ்சாயத்துக்களில் நடக்கும் ஊழல்களைப் பற்றி புகார் செய்தால் அதை விசாரிக்கும் அதிகாரிகள் ரொம்ப காலம் தாமதித்து நடவடிக்கை எடுக்கிறார்கள். அவர்கள் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும். உதாரணமாக என் தொகுதியிலுள்ள ஒரு பஞ்சாயத்தில் 4,000 ரூபாய் வரையில் தவறாக வரி வசூலிக்கப்பட்டிருக்கிறது. அதில் சில நபர்களிடமிருந்து இரண்டு முறை வரி வசூலித்திருக்கிறார்கள். பணம் கொடுத்தவர்களுக்கு இரண்டு ரசீதுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஒன்று தவறான ரசீது. இருந்தாலும் இரு ரசீதுகளும் ஒரே மாதிரியாக இருக்கின்றன. இரண்டு ரசீதுகளிலும் ஒரே நம்பர் இருக்கிறது. இது

எப்படி நடந்திருக்கும் ? அவருக்கு எப்படி ரசீதுப் புத்தகங்கள் வேண்டிய அளவு கிடைக்கும். அச்சாபீஸிலிருந்து அவருக்கு எப்படி ரசீதுப் புஸ்தகம் வருகிறது. நிரூபிக்க முடியாதபடி அந்தக் குற்றத்தை அவர் செய்திருக்கிறார். அது சம்பந்தமாக இன்னும் நடவடிக்கை எடுக்கப்பட வில்லை. அதை உடனடியாக கவனிக்க வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

சட்ட சபை அங்கத்தினர்களுக்கு பஞ்சாயத்துக் கவுன்சிலில் அதிக உரிமை கொடுக்க வேண்டும். பஞ்சாயத்து ஜனங்களுக்கு தொந்தரவுகள் இல்லாத முறையிலும், அவர்களுக்கு மிகுந்த நன்மைகளைச் செய்வதற்கு வகைசெய்யும் முறையிலும் சட்டமியற்ற வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri V. SANKARAN** : கனம் சபாநாயகர் அவர்களே, கிராமப் பஞ்சாயத்து அமைப்பிலுள்ள முக்கிய தத்துவமானது, அதிகாரம் நிர்வாகத்தில் ஒருசில இடங்களில் குவிந்து கிடக்காமல் அதைப் பரவலாக்கி, மக்கள் கையில் கொடுப்பது தான் ஆகும். இந்தத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு தான் நமது இந்திய அரசியல் சட்டத்தில் 48-வது பிரிவில்கூட, எல்லா ராஜ்யங்களிலும் சீக்கிரம் போதிய பஞ்சாயத்துக்களை அமைக்க வேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால், துரதிர்ஷ்டவசமாக, முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் பஞ்சாயத்துக்களை சரியாக அமைப்பதில் கவனம் செலுத்தப்படவில்லை. ஆதலால் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை நிறைவேற்றியபோது நமக்கு கிராமங்களிலிருந்து பூரண ஒத்துழைப்புக் கிடைக்கவில்லை. 1955-ம் வருஷத்தில் திட்டக் குழுவினால் அமைக்கப்பட்ட திட்ட மதிப்பீட்டுக் குழு தன் அறிக்கையில் கிராமங்களில் பஞ்சாயத்துக்களை அமைக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறது. அதுவே திட்டக் கமிஷனின் அறிக்கையிலும் சொல்லப்பட்டிருக்கிறது. சர்க்கார் அதைக் கருத்திற்கொண்டு தான் ஸ்தல அபிவிருத்தித் திட்ட வேலைகளையும் சமுதாய நலத் திட்ட வேலைகளையும் செய்யும் பொறுப்பில் பெரும பகுதியை பஞ்சாயத்துக்களிடம் ஒப்படைத்திருக்கிறார்கள். முந்தைய சட்டத்தில் இல்லாத பல நல்ல அம்சங்கள் இந்த மசோதாவில் சேர்க்கப்பட்டு இருக்கின்றன. ஜில்லா போர்டுகளுக்கு இருந்தநிதி வசதிக் குறைவு இந்த மசோதாவில் நீக்கப்பட்டிருக்கிறது. ஏனென்றால், பல செலவுகளை சர்க்காரே ஏற்றுக்கொள்வதற்கு மசோதாவில் வகை செய்யப்பட்டிருக்கிறது. ஸ்தல அபிவிருத்தித் திட்டங்களையும் சமுதாய நலத் திட்டங்களையும் சர்க்காரே ஏற்று நடத்த முன் வந்திருக்கிறார்கள். அதோடு பஞ்சாயத்தில், எஞ்சினியரிங் வேலைகளை கவனிப்பதற்காக எஞ்சினியரிங் எக்ஸ்டென்ஷன் ஆபீசர் என்ற அதிகாரி நியமிக்கப்படுவார். அவருக்கு சர்க்காரே சம்பளம் கொடுக்கும். ஆகவே அவருடைய சேவை பஞ்சாயத்திற்கு இலவசமாகக் கிடைக்கும். பஞ்சாயத்தில் விவசாயத்திற்கும், கால்நடை வளர்ப்பதற்கும் அதிகாரிகள் நியமிக்கப்படுவார்கள். அவர்களுக்கும் அரசாங்கமே சம்பளம் கொடுக்கும். ஆனால் அவர்களின் முழு சேவை பஞ்சாயத்துக்களுக்கே கிடைக்கும். மேலும், பஞ்சாயத்துக்களில் உள்ள பெரிய ஆஸ்பத்திரிகளையும் தலைமை ஆஸ்பத்திரிகளையும் சர்க்காரே நடத்தப் போகிறார்கள். அத்துடன், மத்திய சர்க்காரின் நிதி உதவியுடன் எல்லா ப்ளாக்குகளிலும் ப்ரைமரி ஹெல்த் ஸெண்டர்களை சர்க்கார் நடத்தப்போகிறார்கள்.

அதோடு கிராமங்களில் இருந்து நகரங்களுக்கு மக்களை குடியேறக் காரணம், கிராமங்களில் போதிய வாழ்க்கை வசதியில்லாததினால் தான். கல்வி வசதி, மருத்துவ வசதி போன்ற வசதிகள் கிராமங்களில் அமையாததுதான் அதற்குக் காரணம். அது போன்ற வசதிகள் கிராமங்களுக்கு செய்து தரப்பட்டால் கிராமங்களில் உள்ள உழைப்பாளிகள் நகரங்களுக்கு குடியேறுவதை தடுக்கலாம். இந்த மசோதா நல்ல முறையில் அமைக்கப்பட்டிருந்தாலும் ஓரிரண்டு குறைகள் இல்லாமல் இல்லை. உதாரணமாக, ப்ராஸ்பெக்டிவ் பட்ஜெட்டை " சிம்பிளிபை " செய்திருக்கலாம். அதில் கொடுத்திருக்கும் வருவாயை பற்றிய கணக்குகளை, நல்ல கணக்கு படித்த

23rd September 1958] [Sri V. Sankaran]

வர்கள்கூட புரிந்துகொள்வது கஷ்டமாக இருக்கிறது. அதை "சிம்பிலிபை" 12-20
செய்யவேண்டும். அடுத்தபடியாக, டெவெலப்மெண்ட் ஸ்கீம் சம்பந்தமாக 3½ p.m.
கோடி ரூபாய் செலவு செய்ய வேண்டியிருக்கும். அது மத்திய சர்க்கார் உதவி கொண்டும், இராஜ்ஜிய சர்க்கார் உதவி கொண்டும் இந்த ஐந்தாண்டுத் திட்ட கால இறுதிக்குள் செய்யப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பின்னால் வரக் கூடிய செலவுகளை, 1/3 பங்கு மத்திய சர்க்காரும், 1/3 பங்கு இராஜ்ஜிய சர்க்காரும், 1/3 பங்கு பஞ்சாயத்தில் உள்ள மக்களும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. Legislature Committee II Report, Volume II-ல் 284 லட்சம் ரூபாய், டிஸ்ட்ரிக்ட் ரோட்கள் அமைக்க போட்டிருப்பதில், 80 லட்சம் முதல் இரண்டு ஆண்டுகளில் செலவழிக்கப்பட்டு இருப்பதாகவும் மீதியுள்ளது பாக்கி மூன்று ஆண்டுகளில் செலவழிக்கப் படுமென்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அந்த முறையில் இருந்து விடாது வரவுகளை நல்ல முறையில் வருடந்தோறும் ஒரே அளவாகச் செலவழிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். 111-வது செக்ஷன், "பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸிலானது, நிர்ணயிக்கப்பட்ட அதிகாரியின் சம்மதத்தை முன்னதாகப் பெற்றுக் கொண்டு பிரஸ்தாப பஞ்சாயத்து யூனியனின் எல்லைகளுக்குள் இருக்கிற எந்த இடத்தையும் மனித உயிருக்காவது ஆரோக்கியத்திற்காவது சொத்துக்காவது தீங்கோ, அபாயமோ வெகுவாய் உண்டாக்கக் கூடியவையென்று அரசாங்கத்தார் அபிப்பிராயப்படுபவைகளும் இது விஷயமாய் செய்யப்படுகிற விதிகளில் குறிப்பிடப்பட்டுள்ளவைகளுமான காரியங்களில் எதற்காகவாகிலும் கமிஷனரால் கொடுக்கப்படுகிற ஒரு லைஸென்ஸ் இல்லாமல் அந்த லைஸென்ஸில் குறிப்பிடப் பட்டுள்ள திட்டங்களை அனுசரித்தன்றி மற்றப்படியும் உபயோகிக்கக் கூடாதென அறிக்கையிடலாம்" என்று இருக்கிறது. இதில் எத்தனை கட்டுப்பாடுகள் இருக்கின்றன. இதுபோன்ற பல ஷரத்துக்கள் இருக்கின்றன. அவைகளை ஓரளவு விசாலப்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

***Sri K. ANBAZHAGAN**: சட்டமன்ற தலைவர் அவர்களே, சிற்றூர், நகரங்கள் ஆகியவற்றின் பஞ்சாயத்துக்களை புதிய ஒரு திட்டத்தின் கீழ் கொண்டுவருவதற்கான மசோதாவை வரவேற்று அதற்குரிய திருத்தங்கள் என்ற முறையில் சில கருத்துக்களைச் சொல்ல விரும்பி நிற்கின்றேன். பஞ்சாயத்து என்று குறிப்பிட்டவுடனே, அது தமிழகத்திற்குப் புதியது என்ற எண்ணம் தோன்றுமேயானால் அது தமிழக வரலாற்றை அறியாத நிலையில் தோன்றும் ஒரு கருத்தாகும் என்று நான் தெரிவிக்கத் தேவையில்லை. கிராம ராஜ்யத்தில் ராமராஜ்யம் காணப்படுகிறது என்று சொல்பவர்கள், அந்த சொற்றொடரில் "கி" என்ற ஒரு எழுத்து இல்லாமற் போனாலே ராமராஜ்யம் தானாகவே வந்துவிடக் கூடுமென்று எண்ணலாம். ராமராஜ்யத்தில் பஞ்சாயத்து இருந்ததற்கு ஆதாரம் கிடைக்கவில்லையென்றாலும், தமிழகத்தில் நீண்ட காலத்திற்கு முன்னதாகவே பஞ்சாயத்துக்கள் இருந்தன என்பதை தமிழ் இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. ஏறத்தாழ ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாகவே தோன்றிய அகநாநூற்றில், ஓலையை வாக்குச் சீட்டாக பயன்படுத்திய நெறியையும், அப்படிப்பயன்படுத்தப்பட்ட ஓலையைக் குடத்திலிட்டு பின்னர் முத்திரையை அழித்துவிட்டு ஓலைச்சுருள்களைக் கையில் எடுக்கும் காட்சியை ஒரு புலவர் சித்தரித்திருக்கிறார். "கயிறு பிணிக் குழிசி ஓலைகொண்மார் பொறி கண்டு அழிக்கும் ஆவண மாக்களின்" என்ற இத் தொடர் அதை விளக்கும். அதற்குப் பின்னரும் இடைக்கால சோழர் காலத்திலும் இந்த வழக்கு மேலும் மேலும் வளர்ந்து, பழங்காலத்தில் நியாயம் வழங்க மட்டுமே உரியதாக இருந்து வந்து ஊராட்சி மன்றங்கள், ஐவர்வாரியம் போன்றவை பிற்காலத்தில் புதிய கடமைகளையும் மேற்கொண்டு செயல்பட்டு வந்ததாக கல் வெட்டுக்கள் மூலம் அறிகிறோம். அதைக் கருதும் போது, பஞ்சாயத்துகளுக்கு இன்றையதினம் எந்த அளவு உரிமை தருவது என்பதுபற்றிப் பிற பகுதிகளில் உள்ள மக்கள் ஐயப்பட்டாலும் தமிழக மக்கள் அதைப்பற்றி ஐயப்படத் தேவையில்லை என்ற கருத்தை நான் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். ஊராட்சி மன்றங்களின் தலைவராக

இருப்பவர்கள் எந்த அளவு தங்கள் கடமையைச் செய்வார்கள், எந்த அளவு பொதுமக்களைத் திருப்திப் படுத்துவார்கள் என்ற ஐயம், ஜனநாயக முறையில் ஓரளவு வளர்ச்சி பெற்றிருக்கும் நமக்கு, மிகப் பழங்காலத்தில் இருந்தே ஊராட்சி மன்றங்களை நடத்தும் தனி நாகரீகத்தைப் பெற்றிருக்கும் நமக்கு ஏற்படத் தேவையில்லை. உண்மையில், தமிழகம் பஞ்சாயத்திற்கு ஏற்றதொரு சூழ்நிலை வளர்ச்சி பெற்றதாகும். வரலாற்று முறைப்படி ராமன், ராவணன் ஆகியோரைக் குறித்து மாறுபட்ட கருத்து நிலவினும், "ராமன் ஆண்டால் என்ன, ராவணன் ஆண்டால் என்ன" என்ற கருத்து தோன்றியதற்குக் காரணமே, முன்னாட்களில் தமிழகத்தில் ஒவ்வொரு கிராமமும் சுயாட்சி பெற்று "செல்ப் சபிஷியன்ட் யூனிட்டாக" **(self-sufficient unit)** இருந்ததினால் தான். அவரவர்கள் தத்தம் கிராம தேவைகளை நிறைவேற்றிக் கொள்வதற்குள்ள வாய்ப்பு அக்காலத்தில் இருந்து வந்தது. ஆகவேதான், மேலே ஒரு மன்னன் இருக்கிறானே அவன் எப்படிப்பட்டவன் என்ற கவலைகுட்படாமல் தமிழக மக்கள் செம்மையாக வாழ்ந்து வந்தார்கள். அக்காலத்தில், ஊராட்சி மன்றங்கள் அவற்றின் கடமைகளை உணர்ந்து செயல் பட்டு வந்ததால் மக்கள் செம்மையாக வாழ்வதற்கு வாய்ப்பு இருந்தது.

"எவ்வழி நல்லவர் ஆடவர்,
அவ்வழி நல்லை வாழிய நிலனே"

என்ற பாட்டுக்கு ஏற்ற முறையில் அக்காலத்தில் மக்களும் நல்லவர்களாக விளங்கினர், மன்றங்களும் சிறந்திருந்தன. இன்று மக்கள் தரம் தாழ்ந்து விட்டது என்று நான் எண்ணவில்லை. ஆனால் ஆட்சி பீடத்தில் இருக்கிற பலர் மற்றவர்களிடம் அதிகாரத்தை—பொறுப்பை ஒப்படைக்கும்போது, ஐயப்பாட்டோடு நோக்குகிற காரணத்தினால்தான், மக்கள் அதற்குத் தகுதி பெற்றவர்களாக இருக்கிறார்களா என்ற கேள்வியை எழுப்புகிறார்கள். உண்மையாகவே, அதிகாரம், கீழேயிருந்து மேலிடத்திற்கு கொஞ்சம் கொஞ்சமாகத் தரப்படவேண்டும். கிராமக் குழுக்கள் தங்களால் நிறைவேற்ற முடியாததை கிராமக் கூட்டுக் குழுக்களுக்கு அளிக்கவேண்டும். அவர்களால் செய்ய முடியாததை மாவட்டக் குழுக்களுக்கு அளிக்கவேண்டும். மாவட்டக் குழுக்கள் தங்களால் இயற்ற முடியாததை மாநில சட்ட மன்றத்திற்கு அளிக்கவேண்டும். மாநில மன்றம் தன்னாலியற்ற முடியாததை மத்திய அரசிற்கு அளிக்கவேண்டும். இன்றைய தினம் உள்ள நிலைமை மத்திய அரசு தனக்கு வேண்டிய அதிகாரங்களை எடுத்துக் கொண்டு மிச்சமுள்ளவற்றை மாநில அரசுகளுக்கு அளித்திருக்கிறது. மாநில அரசு தனது பொறுப்பில் இருக்க விரும்புகின்றதை வைத்துக் கொண்டு மிச்சமுள்ளதை மாவட்ட ஆய்வுக் குழுக்களுக்கு ஆலோசனை சொல்லும் அளவுக்கும் மற்ற கிராம பஞ்சாயத்துகளுக்குச் சிறிது அதிகாரமும் அளித்திருக்கிறது. ஆனால் நிறைவேற்றக் கூடிய சில செயல்களின் அதிகாரங்களையே கிராமக் குழுவிற்கு அளித்திருக்கிறது. இதில் பெருந்தன்மை இருப்பதனை ஒப்புக்கொள்கிறேன். சில உரிமைகளை மனமுவந்து அளிப்பதை வரவேற்கிறேன். ஆனால் எந்த அடிப்படையில் இது பங்கிடப் படுகிறது என்பதைப் பார்க்கும்போது தங்களுக்கு அவசியம் இல்லாத அதிகாரங்களைத்தான் கொடுக்கிறார்கள், கிராமக் குழுக்களுக்கு. காந்தியடிகள் கிராம ராஜ்யம் என்று சொன்னபோது, கிராமமக்களுக்குத் தேவையான அதிகாரங்கள் போக மிச்சமுள்ளதைத்தான் மேல் நிலை ஆட்சி மன்றங்கட்கு அளிக்க வேண்டுமென்ற கருத்தைக் கூறினார்கள். அந்த முறையில் எண்ணிப் பார்க்கும்போது, இதன்படி கிராமங்களுக்கு அளிக்கப் படும் அதிகாரங்கள் போதாது என்ற எண்ணம் தோன்ற இடமிருக்கிறது. மேலும், அவர்கள் பயிற்சி பெறட்டும், அப்படிப் பெற்ற பிறகு அதிகாரங்களை அளிக்கலாம் என்று கருதுவதானால், அவர்கள் செய்யும் காரியங்களை கூர்ந்து நோக்கி, மேலும் அதிகாரங்கள் அளிக்கப்படவேண்டும் என்பதை மறத்தல் ஆகாது.

அடுத்து நான் சொல்வேன், இந்த ஊராட்சி மன்றத் தலைவராக இருப்பவர் முழு அதிகாரப் பொறுப்புடையவராக **(Executive authority)** இருக்கவேண்டும். "எக்ஸிக்யூட்டிவ் அதாரிட்டி" என்ற

23rd September 1958 [Sri K. Anbazhagan]

பெயரை யாருக்குப் பயன்படுத்துவது என்பது பற்றி நேற்று மாறுபட்ட கருத்துக்கள் பேசப்பட்டன. "எக்ஸ்க்யூட்டிவ் அதாரிட்டி" என்று சொல்லும்போது அங்கு நடைபெறும் காரியங்களுக்கு அவர் பொறுப்பாளியாகிறார். பொறுப்பு உள்ளாட்சி மன்றத் தலைவருக்குத்தான் இருக்கவேண்டும். செயலாற்றுகிற அதிகாரியாக வேண்டுமானால் எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர் இருக்கலாம். அதாவது உள்ளாட்சி மன்றக் காரியங்களைச் செயலாற்றும் அதிகாரியாக வேண்டுமானால் அவர் இருக்கலாம். ஆனால் உள்ளாட்சி மன்றத்தின் பொறுப்பு நிர்வாகத் தலைமை மன்றத் தலைவருக்குத்தான் இருக்கவேண்டும். "எக்ஸிக்யூட்டிவ் அதாரிட்டி" மன்றத் தலைவர் என்றும், அரசாங்க ஊழியராக இருக்கும் அதிகாரி "எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர்" அங்குள்ள காரியங்களை, அலுவல்களை நிறைவேற்றும் செயலாளராக இருப்பார் என்றும் ஒரு பாகுபாடு செய்யப்பட்டால், அது ஜனநாயக முறையில் மிக மிக வரவேற்கத்தக்கத்தாக இருக்க முடியும் என்று நான் சொல்லிகொள்ள விரும்புகிறேன்.

அதேபோன்று, உள்ளாட்சி மன்றத் தலைவர், மறைமுகத் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்படுவதால் கட்சி வேறுபாடுகள், அரசியல் முரண்பாடுகள் மிகவும் வளர இடமிருக்கிறது. உள்ளாட்சி மன்ற உறுப்பினர்கள் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறையை விட, ஊர்மக்கள் வாக்காளர்கள், நேரடியாகத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறையே சிறப்புடையதாகும். இன்றைய தினம் இந்தியத் துணைக் கண்டத்தின் தலைவரான ராஷ்டிரபதி பதவிக்கே கூட மக்கள் நேரடியாகத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்ற கருத்து உலவுகிறது. இந்தக்காலத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் இருக்கக்கூடிய ஒவ்வொரு சிற்றூர்களிலும் இருக்கக்கூடிய தலைவர்கள், மறைமுகத் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்ற நிலை இருக்குமானால் அதன் மூலம் ஜன நாயகத்தினுடைய பயனைப் பொதுமக்கள் அடைய முடியாது. ஆகவே இந்தத் தேர்தலில் தலைவரை நேரடியாக தேர்ந்தெடுப்பதற்கு 1-3 p.m.
வேண்டிய வழிமுறையைச் செய்யவேண்டும் என்றுள்ள கருத்தை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளும் என்று நம்புகிறேன்.

அடுத்ததாக இன்றையதினம் இருக்கக்கூடிய குழுக்களில் தாய்மார்கள், பெண்கள் நிச்சயமாக வர முடியும் என்று சொல்ல முடியாது. பெண்களும் எந்த இடத்திலாவது தேர்தலில் நின்று தேர்ந்தெடுக்கபட்டு வரவேண்டும். இவ்விதம் வருவதனுல் போட்டி போடக்கூடிய ஒன்றிரண்டு பெண்கள்தான் தேர்ந்தெடுக்கப்பட்டு வரமுடியும். ஆகவே இந்தப் பஞ்சாயத்து மன்றத்தில் குறிப்பிட்ட அளவு இத்தனை பெண்கள் இருக்கவேண்டும் என்றோ அல்லது இத்தனை பெண் உறுப்பினர்களை கோ-ஆப்ட் செய்துகொள்ளக்கூடிய—இணைத்துக்கொள்ளக்கூடிய—உரிமையை அளித்தோ விதி செய்ய வேண்டும். அதே போல் 50 சதவிகிதத்திற்குக் குறைவாக ஆதிதிராவிடர்கள் இருப்பார்களானால் அங்கு ரிசர்வ் சீட், தனி இடம் இல்லை என்று குறிப்பிட்டிருப்பதும் சரியல்ல என்று கருதுகிறேன். சில இடங்களில் 60 சத விகிதத்திற்கு மேலாக ஆதித் திராவிடர்கள் இருந்தாலும்கூட அந்த இடங்களில் சில மேல்ஜாதிக்காரர்களே தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களாக வருவதற்குத் தகுந்த சூழ்நிலைதான் இன்று உள்ளது. இந்நிலையில் ஆதித்திராவிட மக்களின் உரிமை இச்சட்டத்தில் காக்கப்பட்டிருப்பதாகச் சொல்ல முடியாது. ஆகவே அவர்களுக்கு என்று குறிப்பிட்டு இத்தனை ரிசர்வ் ஸீட்—தனி இடம் என்றோ—அல்லது (அவர்கள் யாரும் இல்லையானால்) இத்தனை உறுப்பினர்களை கோ-ஆப்ட் செய்து கொள்ளலாம் என்ற உரிமையையோ அளிக்கவேண்டும். இவைகளை கவனிப்பதை போன்றே வரிகளை வசூல் செய்வதற்குப் போதிய அதிகாரங்கள் இருந்தால் தான் வசூல் செய்யமுடியும் என்பதையும் கவனிக்கவேண்டும். இன்றைக்கு இருக்கிற பஞ்சாயத்துகளுக்கு நடைமுறையில் வரிவசூல் செய்வதற்குப் போதுமான அதிகாரங்கள் இல்லை. இதனால் பல சமயங்களில் சரியான விதத்தில் வரி வசூல் செய்ய முடியாமல் போகிறது, எனவே இதனையும் நிறைவேற்றும் வகையில் சட்டம் அமையவேண்டுமென விழைகிறேன்.

[23rd September 1958

* **Sri S. C. SADAYAPPA MUDALIAR** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த சபையில் வந்திருக்கும் மசோதாவை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். பஞ்சாயத்து என்பது முன்னாலேயே இருந்து வந்திருக்கின்றது. அதாவது பஞ்சாயத் என்ற சொல் நம் தமிழ் நாட்டில் முன்னால் இருந்து வந்திருப்பதை நாம் அறிவோம். இன்றும் கூட கிராமங்களில் சில விவகாரங்கள் ஏற்படுகிற சமயங்களில் பஞ்சாயத் மூலமாக தீர்த்து வைப்பது இப்போதும் இருந்து வருகிறது. ஆனால் குறுகிய காலத்தில் பஞ்சாயத் என்ற முறையில் காரியங்கள் எல்லாம் நம் கிராமங்களில் ஏற்படவேண்டும் என்று நினைத்துக்கொண்டிருக்கிற இந்த நேரத்தில் கிராமங்களுக்கு பரிபூரண அதிகாரங்களை கொடுத்து கிராம மக்களுடைய நிலையை உயர்த்தி சமுதாயத்தை அபிவிருத்தி செய்யக் கூடிய நிலையில் இந்த மசோதா அமைந்திருக்கிறது என்பதை பார்த்து அதை வரவேற்று ஆதரிக்கிறேன். இன்று நாட்டில் சில கட்சிகள், அதிகாரங்கள் எல்லாம் ஒரு இடத்திலேயே குவிந்து விட்டது என்றும் நமக்கு ஒருவிதமான அதிகாரங்களும் இல்லை என்றும் கூறி சில வித்தியாசமான புள்ளி விவரங்களை காட்டி மக்களிடத்தில் சொல்லுகின்ற நேரத்தில், மக்களிடத்தில் அதிகாரத்தை கொடுத்து கிராமங்களை எல்லாம் முன்னேற்றமடையச் செய்வதற்கு பாடுபடக்கூடியது காங்கிரஸ் கட்சி என்பதை எடுத்துக் காட்டக்கூடிய அளவில் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதைப்பார்க்கின்ற கிராம மக்கள் எல்லாம் உணர்ச்சி அடைகிற அளவுக்கு இது அமைந்திருந்திருக்கிறது என்ற காரணத்தால் இதை நான் வரவேற்கிறேன். இதைப்பற்றி சிலர் பேசுகின்ற நேரத்தில் இதில் கீழ்தாழ்ப்பட்ட மக்கள் என்று சொல்லப்படுபவர்களுக்கு சரியான விதத்தில் பிரதிநிதித்துவம் இல்லை என்று சொன்னார்கள். என்னுடைய தொகுதியாகிய அரக்கோணத்தை எடுத்துக்கொண்டால் அங்கு பல கட்சிகள் ஈடுபடாமல் இருந்த நேரத்திலும் தேர்தலில் ஹரிஜனங்களுக்கு போதுமான பிரதிநிதித்துவம் கிடைத்திருக்கிறது. சில பஞ்சாயத்துகளில் அவர்களுக்கு என்று இருக்கின்ற ஒரு ரிசர்வ் ஸ்தானம் போக, மேலும் ஹரிஜனங்கள் அதிகமாக வந்திருக்கிறார்கள். குறிப்பாக திருமால்பூர் என்ற பஞ்சாயத்தில் மூன்று மெம்பர்கள் வந்திருக்கிறார்கள். அதில் ஒரு ரிசர்வ் ஸ்தானம் போக பாக்கி இரண்டு ஸ்தானங்களுக்கும் ஹரிஜனங்களே வந்திருக்கிறார்கள். ஆகவே பார்க்கும்போது காந்தியடிகள் நினைத்த நினைவு பூர்த்தியாகின்றது. சமூகத்தில் ஒன்று பட்டு வாழக்கூடிய நிலையும், இன்றிருக்கிற நிலையில் பஞ்சாயத்களில் தலைவராக வருவதற்குள்ள சந்தர்ப்பமும் இந்த சட்டத்தின் மூலம் ஹரிஜனங்களுக்கு கிடைக்கின்றது என்பதை பார்த்து என் போன்ற ஊழியர்கள் சந்தோஷப்படக்கூடிய அளவில் இந்த பஞ்சாயத் மசோதா அமைந்திருக்கிறது என்பதை தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். இந்த நிலையில் இதற்கு முக்கியமான சில அதிகாரங்களை பஞ்சாயத்துகளுக்கு கொடுத்திருந்த போதிலும் கூட பொருளாதார துறையில் அந்தந்த கிராமமக்கள் நல்ல வாழ்வு வாழ்வதற்கு தகுந்த முறையில், அதாவது கைத்தொழில் போன்ற தொழில்களை நடத்துவதற்கு போதிய அதிகாரங்களை பஞ்சாயத்துகளுக்கு கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சில வரிகள் மூலமாக பணவசதி கிடைப்பதற்கு வழி யிருக்கிறது என்றாலும் கூட தொழில் முறையில் அங்குள்ள மக்கள் வாழ்வதற்கு ஒரு வழிவகை செய்து கொடுப்பதற்கு பஞ்சாயத்திற்கு அதிகாரம் கொடுக்கவேண்டும். குறிப்பாக யூனியன் பஞ்சாயத்துகளில் எல்லா அதிகாரங்களும் அதிகாரிகளிடத்தில் இருக்கின்றன. தலைவருக்கும் மற்ற அங்கத்தினர்களுக்கும் ஏதோ திட்டத்தை பாஸ் செய்து கொடுக்க முடியுமே தவிர அதை நிறைவேற்றுவதற்குள்ள அதிகாரம் கிடையாது, அந்த அதிகாரம் வேறு ஒரு அதிகாரியிடம் தான் இருக்கிறது என்று இங்கு பல மெம்பர்கள் சொன்னார்கள். ஆனால் இன்றுள்ள நிர்வாக முறையை பார்க்கின்ற பொழுது சரியான முறையில், நிதி நிலைமையில் முன்னேற்றம் காண வேண்டியிருப்பதால், இந்த அதிகாரங்கள் எல்லாம் அதிகாரிகளிடத்தில் சில வருஷங்களுக்காவது இருப்பது தான் பொருந்தும் என்று நான் நம்புகிறேன். நாம் முன்னேற்றம் அடைவதற்கு இன்னும் பல திட்டங்களை நிறைவேற்றுவதற்கு தீர்மானம் மூலமாக செய்து விடுவோமேயானால், அதை நடத்தி நல்ல முறையில் கிராமங்களுடைய போக்குவரத்து வசதி செய்து கொடுப்ப

23rd September 1958] [Sri S. C. Sadayappa Mudaliar]

தற்கும் குடி தண்ணீர் வசதி செய்து கொடுப்பதற்கும் வேண்டிய நடவடிக்கைகளில் ஈடுபடுவதற்கு இந்த பஞ்சாயத்து தலைவர்களுக்கோ அல்லது மெம்பர்களுக்கோ சிரமமாக இருக்கும் என்று நினைத்துத்தான் இந்த வேலைகள் எல்லாம் நிர்வாக அதிகாரி மூலமாக இருக்கவேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். ஆகவே இந்த முறை சரிதான் என்று எண்ணுகிறேன். குறிப்பாக கிராம சமுதாய அமைப்பு திட்டங்களையும் இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது. கடந்த தேர்தலில் பொது ஜனங்களால் தலைவர் தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்றும், மெம்பர்களால் தேர்ந்தெடுப்பது சரியல்ல என்றும் சொன்னார்கள். இவ்விதம் ஜனங்களால் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டதால் பெரிய ஜாதிப்பிரச்னை ஏற்பட்டது. கட்சி வேறுபாடுகள் ஏற்பட்டன. இப்போது இருக்கின்ற முறைப்படி பார்த்தால் மெம்பர்கள் தலைவரை தேர்ந்தெடுக்கவேண்டும் என்று இருக்கிறது. இதனால் தலைவருக்கும் மெம்பர்களுக்கும் சில குறிப்பிட்ட விஷயங்களில் மாத்திரம் கருத்து வேறுபாடு இருக்குமே தவிர மற்ற எல்லா விஷயங்களிலும் ஒற்றுமை இருக்கும் என்று நம்புகிறேன். ஆகவே சர்க்கார் இப்போது கையாண்டிருக்கிற முறை சரியானது என்றே நினைக்கிறேன். அதோடு இந்த பஞ்சாயத்துகள் நல்ல முறையில் நடப்பதற்கு சர்க்கார் போதுமான அதிகாரங்களை கொடுத்தால், அந்தந்த கிராமங்களில் போதுமான அளவுக்கு சுகாதார அபிவிருத்தி வேலைகளை செய்வதற்கும், கல்வி சம்பந்தமான வேலைகளை நல்ல முறையில் நடத்துவதற்கும் பஞ்சாயத்துகள் மூலம் இந்த நாட்டில் நல்ல முறையில் ஜனநாயக சமுதாயத்தை அமைக்கவும் உதவியாக இருக்கும் என்பதை தெரிவித்துக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

(Deputy Speaker in the Chair.)

SRIMATHI KAMALAMBUJAMMAL : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச் சபையிலே கொண்டுவரப்பட்டுள்ள பஞ்சாயத்து மசோதா மீது சில ஆலோசனைகளைக் கூற விரும்புகிறேன். 12–40 p.m.

ஏற்கெனவே, நம்முடைய நாட்டிலே பழைய காலத்திலிருந்து பஞ்சாயத்து ஏற்பட்டிருப்பது வாஸ்தவம்தான். ஆனால் சற்று முன்னேற்றத் துறையிலே அமைக்க வேண்டுமென்ற கருத்தோடு இப்போது இந்த மசோதா கொண்டுவரப்பட்டது வரவேற்கத்தக்கது. ஆனாலும் இதிலுள்ள சில குறைபாடுகளையும் இங்கு எடுத்துக்கூறவேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது.

உதாரணமாக தேர்தல் முறையை எடுத்துக் கொண்டால், தற்போதுள்ள தேர்தல் முறை சரியானபடி இல்லை என்று தான் சொல்வேன். தேர்தலிலே தள்ளுபடியாகாத ஓட்டு இருக்கும் நிலையிலே, தேர்தலிலே குழப்பம் ஏற்படுகிறது. ஒரு மெம்பர் 200 ஓட்டு இருந்தால் வெற்றி பெற்று வரமுடியும் என்ற நிலை இருக்கும்போது, 50 ஓட்டர்களைமட்டும் கலந்து கொள்ளச் செய்து, ஒவ்வொருவரும் 4 ஓட்டு போடும்படி செய்து, வேறு ஒரு நபரையும் ஓட்டு வேண்டுமென்று கேட்கக் கூடிய சூழ்நிலை இல்லை. ஆகையால் நல்ல செல்வாக்கு உள்ளவர்கள், உண்மையிலேயே அவர்களுக்கு கிராமத்திற்கு சேவை செய்யவேண்டுமென்ற மனப்பான்மை இல்லையென்றாலும், அந்த முறையில் மெம்பர்களாக வந்து விடுவதற்கு வாய்ப்பு இருக்கிறது. ஒன்று குறி போடும் முறையோ அல்லது வோட்டில் தள்ளுபடி முறையோ அனுசரிக்காவிட்டால் இந்தத் தேர்தலில் குழப்பம் இருக்கும். அப்படியில்லையென்றால், வார்டுக்கு ஒரு அங்கத்தினர் அல்லது 4 அங்கத்தினர் வேண்டுமென்றாலும், அந்த வார்டில் வசிப்பவர்கள் மட்டும் தான் வோட்டுப் போடவேண்டுமென்ற முறையைக் கொண்டு வந்தால் குழப்பம் நீங்க ஒரு சந்தர்ப்பம் ஏற்படும்.

ஒரு பஞ்சாயத்திலே 5 அங்கத்தினர்களுக்குக் குறையாமலும், 15 அங்கத்தினர்களுக்கு மிகையாக இல்லாமலும் இருக்கலாம் என்று இருக்கிறதேயொழிய பெண் அங்கத்தினர்கள் இருக்க வேண்டுமா என்று குறிப்

[Srimathi Kamalambujammal] [23rd September 1958

பிடப்படவில்லை. பெண்கள் தாங்களாக எலெக்ஷனில் நின்று வருவது கஷ்டம். சட்டசபை எலெக்ஷனில் எல்லா தொகுதிகளுக்கும் பெண் அங்கத்தினர்களை நிறுத்துவதே கஷ்டமென்றால், கிராமங்களில் பஞ்சாயத்துக்களுக்கு தாங்களாக முன் வந்து நிற்பது சாத்தியமல்ல. பெண் அங்கத்தினர்களுக்கு ஸ்தானங்களை ஒதுக்கினாலொழிய பெண்கள் அங்கத்தினர்களாக வருவது கஷ்டம். தனிப்பட்ட முறையில் பெண் அங்கத்தினர்களுக்கு ஸ்தானங்களை ஒதுக்கித் தரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

12-வது பிரிவிலே, "ஒரு பஞ்சாயத்து யூனியனில், ஒவ்வொரு பஞ்சாயத்தும் அந்த பஞ்சாயத்துக்குரிய வாக்காளர் பட்டியலில் பெயர் கண்டுள்ள ஒரு நபர் அந்த பஞ்சாயத்து அங்கத்தினராக இருந்தாலும் இராவிட்டாலும் அந்த நபரை பஞ்சாயத்து யூனியன் கவுன்ஸிலுக்கு நிர்ணயிக்கப்பட்ட முறையில் தேர்ந்தெடுக்க வேண்டும்" என்று இருக்கிறது. அப்படி ஒருவரை, வோட்டர் லிஸ்டில் இருக்கிறார் என்று வைத்துக் கொண்டு தேர்ந்தெடுத்து யூனியன் கவுன்ஸிலுக்கு அனுப்ப வேண்டுமென்றால், அவர் அந்த பஞ்சாயத்தின் நடவடிக்கைகளில் கலந்துகொள்ள உரிமை இருக்கிறதா என்பதைப் பற்றி ஒன்றும் கொடுக்கப்படவில்லை. அப்படி பஞ்சாயத்திலே கலந்து கொண்டு அதன் நடவடிக்கைகளில் பங்கு கொள்ளவும், ஓட்டுக் கொடுக்கும் உரிமையும் இல்லாத ஒருவர் யூனியன் கவுன்ஸிலில் இருந்தால் அந்த பஞ்சாயத்துக்கு அனுபவத்தில் என்ன பலன் இருக்கும் என்பதைக் கேட்க ஆசைப்படுகிறேன். பஞ்சாயத்தினுடைய நடவடிக்கைகளில் கலந்து கொண்டால் தான் அவருக்கு யூனியனில் எடுத்துச் சொல்ல சந்தர்ப்பம் ஏற்படும். அப்படியில்லாது தனிப்பட்டவர்களை தேர்ந்தெடுப்பதினால் அந்த பஞ்சாயத்துக்கும் அவருக்கும் தொடர்பு இருக்காது. பஞ்சாயத்துக்களில் என்ன நடக்கிறது, பஞ்சாயத்துக்களின் குறை என்ன என்று பூர்ணமாக அறிந்து கொள்ள முடியாது. ஆகையால் பஞ்சாயத்து அங்கத்தினரையோ அல்லது தலைவரையோ யூனியனுக்கு அனுப்ப வேண்டுமென்று மாற்றி அமைக்க வேண்டுமென்பது எனது அபிப்பிராயம்.

* SRIMATHI HEMALATHA DEVI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஒரு பத்து அடுக்கு கட்டிடத்தைக் கட்ட வேண்டுமானால், அதனுடைய அஸ்திவாரம் பலமாக இருக்கவேண்டும் என்பது யாவரும் அறிந்ததே. அப்படியே எல்லோரும் நாட்டில் கிராம ராஜ்யத்தை ஸ்தாபிக்க வேண்டுமென்று கூறினார்கள். அப்படி ஸ்தாபிக்க வேண்டுமென்று எண்ணித்தான் எல்லா கிராமங்களிலும் பஞ்சாயத்து ஏற்படுத்த வேண்டுமென்று கொண்டு வந்திருக்கும் இந்த மசோதாவை நான் மனப்பூர்வமாக வரவேற்று ஒரு சில வேண்டுகோளையும் எடுத்துக் கூற விரும்புகிறேன்.

குறிப்பாக, பஞ்சாயத்து தலைவர்களைத் தேர்ந்தெடுக்கிறார்களேயொழிய அதிகாரங்கள் எல்லாம் எக்ஸிகூடிவ் ஆபீஸருக்கு இருப்பதாகத் தெரிகிறது. தலைவருக்கு ஒரு பொறுப்பைக் கொடுத்து விட்டால் போதாது. பொறுப்பைக் கொடுப்பதோடு கூட அதிகாரத்தையும் அவர்களுக்குக் கொடுக்கவேண்டியது மிக மிக அவசியம். அதிகாரம் இல்லையென்றால், ஒரு உபாத்தியாயர் பிள்ளையை நல்ல புத்திசாலியாக—அறிவாளியாக—ஆக்கவேண்டுமென்ற நோக்கத்தோடு பாடம் சொல்லிக் கொடுக்காது, கடமைக்காகப் பாடம் சொல்லிக் கொடுத்து, படித்தால் என்ன, படிக்காவிட்டால் என்ன என்று விட்டு விடுவது போல் இருக்கிறது. அது போல் பஞ்சாயத்து தலைவர்களுக்கு பொறுப்பைக் கொடுத்து அதிகாரம் இல்லையென்றால் அந்த நிலைமையில் தான் இருக்க முடியும்.

பஞ்சாயத்து கவுன்ஸிலில் எம்.எல்.ஏக்கள், எம்.எல்.ஸீக்கள், எம்.பீக்கள், இவர்களுக்கு ஆலோசனை சொல்லும் பொறுப்பை மட்டும் கொடுத்தால் போதாது. மற்ற அங்கத்தினர்களுக்கு இருப்பதைப் போல் இவர்களுக்கும் ஓட்டு உரிமையையும் அளிக்க வேண்டுமென்பது எனது தாழ்மையான அபிப்பிராயம்.

23rd September 1958] [Srimathi Hemalatha Devi]

பெண்களுக்கு தற்போது நகர சபைகளிலும் சரி, பஞ்சாயத்துக்களிலும் சரி ஸ்தானங்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. ஒரு நகர சபையில் 36 ஸ்தானங்கள் இருந்தால், அதில் 2 ஸ்தானங்களை பெண்களுக்கு ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். இந்த மசோதாவிலே அந்த மாதிரியாகக் கூட பெண்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கப்படவில்லை. இதற்குக் காரணம் கேட்டால், பெண்களுக்கு சம அந்தஸ்து இருக்கிறது, சம உரிமை இருக்கிறது, ஆகையால் தனி இடம் எதற்குக் கேட்கிறீர்கள் என்று கேட்கிறார்கள். ஆனால் அதில் இருக்கும்படியான ஒரு குறைபாட்டை எடுத்துக் கூற விரும்புகிறேன். முன்பு நடந்த சட்டசபை கூட்டத்தில் கேள்வி நேரத்தில் பெண்களுக்கு பஸ்களில் தனியாக ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும் இடம் போதாது என்று கேள்வி கேட்ட நேரத்தில், அமைச்சர் அவர்கள் ஆண்கள், பெண்கள் அதிகமாக வந்து விட்டால், ஆண்கள் எழுந்து இடம் கொடுக்க வேண்டியது அவர்களுடைய கடமை, அதை அவர்கள் செய்யத் தவறினால் என்ன செய்வது என்று கூறிவிட்டார்கள். அதே சமயத்தில் பெண்களைத் தேர்ந்தெடுப்பதற்காக ஆண்கள் இடம் கொடுத்து விடுகிறார்களா என்று தெரிந்து கொள்ளவேண்டும். இப்போது இங்கு வந்திருக்கும் பெண் அங்கத்தினர்களெல்லாம் ஆண்களுடன் போட்டியிட்டுத் தான் வெற்றி பெற்றிருக்கிறார்களேயொழிய, போட்டியிடாமல் வரவில்லை. பெண்கள் சரிபாதிக்கு அதிகப்படியாக இருக்கிறார்கள் என்ற நிலையில், அவர்களுக்கு தனி ஸ்தானங்கள் ஒதுக்கினாலதான் அவர்கள் வர முடியும். ஒரு தேர்தலில் பெண்கள் நின்றால், ஆண்கள் விட்டுக் கொடுக்கும்படியான மனப்பான்மை வரும் வரை பெண்களுக்கு ஸ்தானங்களை ஒதுக்கிக் கொடுக்க வேண்டுமென்று வலியுறுத்திக்கேட்டுக் கொள்கிறேன்.

மேலும் ஒரு அங்கத்தினர் பேசும்போது, பஞ்சாயத்துத் தேர்தல் முன்பு இருந்ததைப் போலல்லாமல் இருப்பதால், அதாவது அங்கத்தினர்கள் தேர்ந்தெடுப்பதென்று இருப்பதால, அதற்காக 2,000, 3,000 செலவு செய்து வெற்றிபெறக் கூடிய அளவில் இருப்பதாகவும் அங்கத்தினர்களை தலைமறைவாய் தூக்கிச் செல்லப்படுவதாகவும் அறிவித்தார்கள். ஆனால் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவர்களைக் கொண்டு பஞ்சாயத்து நிர்வாகம் செய்ய முடியவில்லை, அவர்களுக்குள் ஒற்றுமை இருப்பதில்லை என்ற காரணத்தினால், அங்கத்தினர்களே ஒற்றுமையாக தலைவரைத் தேர்ந்தெடுத்தால் பஞ்சாயத்து நிர்வாகம் நன்றாக நடக்கும் என்று அரசாங்கம் எதிர்ப்பார்க்கிறது. இது எப்படி இருக்கிறது என்றால் ஒரு பூட்டையும் சாவியையும் நாம் நமது பாதுகாப்பிற்கும் பந்தோபஸ்திற்கும் வைத்துக்கொள்கிறோம். அதற்கு மற்றொரு திருட்டு சாவியைக் கண்டுபிடித்தால் நாம் என்ன செய்ய முடியும் ? எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்து அரசாங்கம் நல்ல காரியத்தைச் செய்கிறார்கள். மக்கள் நல்லபடி உணர்ந்து, குறிப்பாக பஞ்சாயத்துக்களில் நல்ல முறையில் பணியாற்ற வேண்டுமென்று கலந்து கொண்டு, இம்மாதிரியான காரியங்களில் ஈடுபடக் 12-50
கூடாது. எல்லோரும் நல்லபடி பணியாற்ற வேண்டுமென்று நான் தெரி p.m.
வித்துக்கொள்ள விரும்புகிறேன். நாட்டினுடைய க்ஷேமத்திற்கு அடிப்படையாக இருக்கும் வகையில், பஞ்சாயத்துகள் நல்ல முறையில் சேவை செய்ய வேண்டுமென்ற நல்லெண்ணத்துடன் கொண்டு வரப்பட்டிருக்கும் இந்த மசோதாவை வரவேற்று, என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI P. VEERAPPA KOUNDER : மதிப்பிற்குரிய உபதலைவர் அவர்களே, இந்த பஞ்சாயத்து மசோதாவை வரவேற்கின்ற நேரத்திலே அதிலேயுள்ள சிறு சிறு குறைபாடுகளைப் பற்றி நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்த மன்றத்திலே உள்ள பல அங்கத்தினர்கள் இந்த மசோதாவிலுள்ள குறைபாடுகளை பல வகைகளிலே எடுத்துச் சொன்னார்கள். நான் சிலவற்றை எடுத்துக்கூற விரும்புகிறேன்.

இந்த பஞ்சாயத்து ஆரம்ப தேர்தலே சரியான முறையில் அமைக்கப்படவில்லை என்பது தான் என்னுடைய அபிப்பிராயம். ஆரம்பமே சரியில்லை என்றால், அங்கம் பூராவும் எப்படி சரியாக இருக்கமுடியும் ? 10 நாட்களுக்கு முன்னதாக இத்தனும் தேதி ஆரம்பத் தேர்தல் நடக்கப் போகி

கிறது என்று கிராம பஞ்சாயத்து ஆபீசர் தேதி குறிப்பிட்டு அனுப்பி விடு கிறார், கிராம மக்கள் உஷாராக இருந்து, என்றைக்கு எலெக்ஷன் வரப் போகிறது, எப்பொழுது நாமினேஷன் தாக்கல் செய்யவேண்டும் என்று ஆவலோடு இருக்கிறார்கள். பஞ்சாயத்து ஆபீசர் அன்று காலை எட்டு மணிக்கு வருகிறார். 8 மணியிலிருந்து 12 மணி வரையிலும் நாமினே ஷன் தாக்கல் செய்யலாமென்று சொல்லுகிறார். சில அங்கத்தினர்கள் 8 மணியிலிருந்து 12 மணிக்குள் நாமினேஷனை தாக்கல் செய்கிறார்கள். அதற்குப் பிறகு 3 மணியிலிருந்து 5 மணி வரையிலும் அவரவர்களுடைய சின்னத்தைப் பெறலாம் என்று சொல்லுகிறார். சின்னம் என்றால், யானை, ஒட்டகம், மணி, மாடு இவைகளைப் போன்றவைகள். இவ்வாறு பலவகைச் சின்னங்களை ஒதுக்குகிறார். பிறகு, முதல் நாள் மாலை 5 மணியி லிருந்து மறுநாள் காலை எழு மணி வரையிலும் வாபஸ் பெற்றுக்கொள் கிறவர்கள் வாபஸ் வாங்கிக் கொள்ளலாம் என்று சொல்லுகிறார் எலெக் ஷன் ஆபீசர். இவ்வாறு சொல்லி விட்டு காலை 8 மணிக்கு தேர்தலை நடத்த ஆரம்பிக்கிறார். முதல் நாள் மாலை 5 மணி முதல் மறுநாள் காலை 7 மணி வரையில் வாபஸ் வாங்கிக்கொள்ளலாம் என்று சொல்லி விட்டு, 8 மணிக்கு தேர்தலை நடத்தினால் எப்படி அங்கத்தினர்கள் கிராமங் களிலுள்ள மக்களிடம் சென்று வோட் கேட்பது ? எந்த சின்னம் அவர் களுக்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதை அறிந்து எப்படி மக்களிடம் போய் வோட் போடுங்கள் என்று சொல்ல முடியும் ? இந்த நிலையில் கிராமத்திலுள்ள மக்கள், யாருக்கு வோட் அளிப்பது, எந்தச் சின்னத்தில் வோட் சீட்டை போடுவது என்று தெரியாமலிருக்கிறார்கள்.

கிராமப் பகுதிகள் முன்னேற்றமடைய வேண்டுமானால் ஹரிஜனங்களுக் காக ஒதுக்குவது போன்று பெண்களுக்கும் தனி வார்டு ஒதுக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

* SRIMATHI A. S. PONNAMMAL : மதிப்பிற்குரிய உதவி சபா நாயகர் அவர்களே, இந்த மசோதாவை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இங்கே பல அங்கத்தினர்கள் பேசும்பொழுது, ஏதோ ஒரு எஸ்.எஸ்.எல்.ஸி. மாணவனுக்கு ஒரு ஹையர் கிரேடு வாத்தியார் பாடம் சொல்லிக் கொடுப்பது போன்றும், இன்னும் " முத லில் கோணல், முற்றிலும் கோணல் " என்றும், மேலும் பஞ்சாயத்து போர்டிலே இருக்கிறவர்களுக்கு சரியானபடி அதிகாரங்கள் வழங்கப்பட வில்லையென்றும் குறிப்பிட்டார்கள். எஸ்.எஸ்.எல்.ஸி. மாணவனுக்கு ஹையர் கிரேடு வாத்தியார் பாடம் சொல்லிக்கொடுப்பது உண்மை. என் தங்கைக்கு ஒரு ஹையர் கிரேடு வாத்தியார் நல்ல முறையில் பாடம் சொல்லிக் கொடுக்கிறார். காங்கிரஸ்காரரை ஹையர் கிரேடு வாத்தியாரைப் போலவும் தங்களை எஸ்.எஸ்.எல்.ஸி. மாணவனைப் போலவும் நினைத்து பெருமை கொள்ளவேண்டாம்.

அடித்தபடியாக, " முதலில் கோணல், முற்றிலும் கோணல் " என்றும், பஞ்சாயத்து மெம்பர்களுக்கு அதிகாரங்கள் கொடுக்கப்படவில்லை என்றும் சொல்லப்பட்டது. இன்றைக்கு ஒரு மாடி வீடு கட்ட வேண்டு மென்று சொன்னால், அதற்கு சரியானபடி கீழே அஸ்திவாரம் போட்ட பிறகு தான் மாடியை எழுப்ப வேண்டுமே தவிர, எடுத்த எடுப்பிலேயே மாடியை அமைத்து விடுவோமேயானால், மாடியின் கதி என்னவாகும், அதன் கீழ் உள்ளவர்களின் கதி என்னவாகும் என்பதை நாம் சிந்தித்து பார்க்கவேண்டும். மகாத்மா காந்தி அவர்கள் விரும்பியது போல் இன்றைக்கு கிராம ராஜ்யத்தை உருவாக்கக்கூடிய நிலையிலே, பஞ்சாயத்து போர்டுகள் அவர்களுடைய பகுதிகளுக்கு தேவையான நல்ல நல்ல காரி யங்களை அவர்களே செய்ய வேண்டுமென்ற அடிப்படையிலே இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது என்பதை நாம் எல்லோரும் வரவேற்க வேண்டும்.

23rd September 1958] [Srimathi A, S. Ponnammal]

பெண்களுக்கு பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டியதைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கேள்வி நேரத்தில் பதிலளிக்கும்பொழுது, "ஐந்தில் ஒரு பங்கு ஹரிஜனங்கள் இருந்தாலும், பாதிக்குப்பாதி ஹரிஜனங்கள் இருந்தாலும், பிரதிநிதித்துவம் கிடையாது" என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். பாதிக்குப்பாதி இருக்கிற ஹரிஜனங்களுக்கும் அவசியம் பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். ஏனென்றால், சமுதாயத்திலே இருக்கின்ற மற்ற ஜாதி மக்களுடன் ஹரிஜனங்கள் போட்டி போட முடியாது. பொருளாதார துறையில் அவர்கள் இன்னும் முன்னேறவில்லை. ஆகவே பாதிக்குப் பாதி இருக்கிற இடங்களில் கூட ஹரிஜனங்களுக்கு பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டும். இன்றைக்கு 100-க்கு 52 பேர் பெண்களாக இருக்கிறார்கள். கிராமப்புறங்களிலே காரியங்களை நல்ல முறையில் நிர்வகிக்கவேண்டுமென்றால் பாதிக்குப் பாதியாக பெண்கள் இருந்தால்தான் வேலைகளை கவனிக்க முடியும். ஆகவே பாதிக்குப் பாதியாக பெண்களுக்கு பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஒரு சில பஞ்சாயத்து போர்டுகளை எடுத்துக்கொண்டால் "**establishment charges**"-க்கும் கூட பணம் போதாது நிலை இருக்கிறது. குறிப்பாக, என்னுடைய தொகுதியான நிலக்கோட்டையை எடுத்துக்கொண்டால் குடிதண்ணீர் வசதிக்காக 15,000 ரூபாய் கடன் கேட்டிருந்தார்கள். நான் அமைச்சர் அவர்களைப் பார்த்தேன். இன்னும் மற்றவர்களையும் பார்த்துக் கேட்டதற்கு, பஞ்சாயத்து போர்டுக்கு திருப்பிக் கொடுக்க சக்தியிருக்கிறதா என்று கேட்கிறார்கள். தாலூகா தலைநகருக்கு பணவசதி போதாமல் இருக்கிறது. எனவே எந்தெந்த வகையில் பஞ்சாயத்துப் போர்டுகளின் வருமானத்தைப் பெருக்கி, எப்படி பண வசதியை உண்டாக்க முடியும் என்று பார்ப்போமேயானால், கிராமப் புறங்களிலே அநேகம் குடிசைத் தொழில்கள், மற்றும் சிறு சிறு தொழில்களை ஏற்படுத்தினால் தான் ஓரளவுக்கு பஞ்சாயத்துகளுக்கு வரும்படி கிடைக்கும். அதை வைத்துக்கொண்டாவது அவர்கள் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க முடியும். உணவு உற்பத்தியை அதிகமாகப் பெருக்க வேண்டும், ஜனத் தொகை குறைய வேண்டுமென்று எல்லாம் பிரசாரம் செய்கிறோம். ஆனால் நடைமுறையில் இந்த பஞ்சாயத்து கவுன்சில்கள், எப்படி எப்படி மக்கள் விவசாயம் செய்யவேண்டும், எவ்வாறு குடும்பக் கட்டுப்பாடு செய்ய வேண்டும் என்று எடுத்துச் சொன்னால் அங்கேயுள்ள மக்கள் ஓரளவு புரிந்துகொள்வார்கள் என்பது என்போன்றவர்களுடைய கருத்து. ஏதாவது கூட்டங்களிலே சென்று குடும்பக் கட்டுப்பாட்டைப் பற்றிக் கூறினால், "தெய்வம்" என்ற அடிப்படையிலேதான் இந்தப் பிரச்னையை நோக்குகிறார்கள். வெள்ளம் வருவதற்கு முன்பு அணை கட்டுவது போன்று, இந்த பஞ்சாயத்து கவுன்சில்கள் மூலமாக, கிராமங்களிலே எடுத்துச் சொன்னால் வெற்றி காண முடியும். பஞ்சாயத்துகளிலே எம்.எல்.ஏ.-க்கள் இருந்தபோதிலும், அவர்களுக்கு வோட்டு உரிமை இருந்தால் தான் ஓரளவுக்கு கருத்துக்களை நல்ல முறையில் எடுத்துச் சொல்வதற்கு வாய்ப்பு இருக்கும். அவர்களுக்கு சேர்மன் பதவி கொடுக்கக் கூடாது என்று சட்டத்தில் சொல்லியிருக்கிறது. அவர்களுக்கு தலைவர் பதவி கொடுப்பதை நானும் விரும்பவில்லை. வோட்டு உரிமையாவது எம்.எல்.ஏ.-க்களுக்கு அளிக்கப்படவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI G. VENKATACHALA NATTAR: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை ஆதரித்து நான் ஒரு சில வார்த்தைகள் பேச முன் வந்துள்ளேன். இந்த பஞ்சாயத்து மசோதாவில், ஸர்சார்ஜ், அதாவது ஒரு பஞ்சாயத்து எல்லைக்குள்பட்ட நிலங்களை விற்பது, வாங்குவது மூலம் ஏற்படும் லாபத்தை அந்தப் பஞ்சாயத்து அபிவிருத்தி தொகுதியில் ஒரு வருஷத்திற்குப் பிறகு நில வரியை அனுசரித்து பங்கீடு செய்து கொடுக்கப்படும் என்று இருப்பதை மாற்றி, அந்தந்த பஞ்சாயத்துக்கே இந்த ஸர்சார்ஜை கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். 1 p.m.

அடுத்து, பஞ்சாயத்தில் அங்கம் வகிக்கும் அங்கத்தினர்கள் காண்டிராக்ட் போன்ற தொழில்களை வைத்துக்கொள்ளக்கூடாது என்று இருப்பதில், ஒரு திருத்தம் இருந்தால் நலமாக இருக்கும் என்று கருதுகிறேன். உதாரணமாக, தேசீய அபிவிருத்தி திட்ட பகுதிகளில் கிராமப் பஞ்சாயத்துகளில் அங்கம் வகிக்கும் அங்கத்தினர்கள் ஒரு சில வேலைகளில் முன்வந்து மக்களின் பங்கு தொகைக்காக ஒரு ஒப்புதல் எழுதிக்கொடுத்து, அவர்கள் அந்த வேலைகளை நடத்தக்கூடிய நிலை இருக்கிறது. அப்படி கிராம அபிவிருத்தியில் அக்கரை கொண்டுள்ள அங்கத்தினர்கள் இம்மாதிரியான வேலைகளில் முன்நிற்கும்பொழுதும், அவர்கள் கண்டிராக்டர்களாக கருதப்பட்டால், அபிவிருத்தி வேலைகளில் தடை ஏற்பட ஹேதுவாகும். ஆகவே, ரூ. 1,000 அல்லது 2,000 பொருமான வேலைகளை இப்படி அங்கத்தினர்கள் அபிவிருத்தி திட்டத்தின் கீழ் ஏற்று நடத்தினல் குறை இல்லை என்று ஒரு திருத்தம் இருந்தால் நன்ருக இருக்கும் என்று கருதுகிறேன்.

அடுத்து, தேசீய அபிவிருத்தி திட்ட வேலைகளை பஞ்சாயத்துகள் கவுன்சில் சம்மதம் பெற்று அந்த அபிவிருத்தி தொகுதியில் அமுல் நடத்த வேண்டும் என்று உள்ளதை, நேரடியாகவே அந்த அபிவிருத்தி தொகுதிகளில் தேசீய அபிவிருத்தி திட்ட வேலைகள் அமுல் நடத்தப்பட வேண்டுமென்று இருக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, பிரைவேட் மார்க்கெட்களில் வருமானத்தில் 15 பர் செண்ட் லைசென்ஸ் கட்டணமாக வசூலிக்கப்படும் என்று உள்ளதை, 25 பர் செண்ட் லைசென்ஸ் கட்டணமாக வசூல் செய்யலாம் என்று திருத்தி அமைத்தால் நன்ருக இருக்கும்.

பஞ்சாயத்துகள் விதிக்கும் வரிகளை தள்ளுபடி செய்வதென்ருல், ஜில்லா கலெக்டர்கள்தான் செய்ய வேண்டுமென்று இருக்கிறது. எந்த பஞ்சாயத்துகள் வரிகளை போடுகின்ருர்களோ அவர்களுக்குத் தான், வரிகளை செலுத்துபவர்கள் கட்ட சக்தியற்றவர்களா என்ற நிலையை தெரிந்து கொள்ளமுடியும். ஆகவே, அப்படி செலுத்தப்படாமல் இருக்கக்கூடிய வரியை தள்ளுபடி செய்யும் அதிகாரம் பஞ்சாயத்துகளுக்குத்தான் அளிக்கப்படவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்து, கிணறு, குளம் போன்ற குடிதண்ணீர் வசதிகள் பஞ்சாயத்துகளுடைய நிர்வாகத்தில் விடப்பட்டிருக்கின்றன. பஞ்சாயத்துகள் அவைகளை சரிவர நடத்த முடியாத நிலைமை ஏற்பட்டால், கவுன்சில்கள் அவைகளை மேற்கொண்டு நடத்தக்கூடிய ஒரு சூழ்நிலை இருக்கவேண்டும். கவுன்சில்களுக்கு அந்த அதிகாரங்கள் இருக்கவேண்டும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

கடைசியாக, பொதுவாக அதிகாரங்கள் அதிகாரிகளிடையே ஒப்படைக்கப்பட்டிருப்பது பற்றி குறை சொல்லப்பட்டது. நாம் ஒவ்வொருவரும் மனதில் கொள்ளவேண்டியது என்னவென்ருல், 10 ஆண்டுகளுக்கு முன்பு அவர்கள் அதிகாரிகளாகத் தான் இருந்தார்கள். இப்பொழுது அவர்களும் நம்மில் ஒருவராக நம்முடன் பணியாற்றி வருபவர்கள் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. இன்னும் சில அங்கத்தினர்கள், அதிகாரிகள் சில வருஷங்களில் மாற்றப்படுவார்களாதலால், அவர்களுக்கு பொறுப்பு இருக்காது என்று சொன்னுர்கள். நான் கருதுகிறேன், நிரந்தரமாக பயிற்சி பெற்ற, அனுபவம் பெற்ற அதிகாரிகளிடம் அதிகாரங்களை ஒப்படைப்பதுதான் நியாயம். மேலும் நம்மில் ஒருவரான அவர்களிடம் அதிகாரங்கள் இருப்பதில் தவறு இல்லை. நாம் நமது பகுதிகளில் ஆக்க வேலைகளை உடனடியாக நடத்த, அவர்களுடைய உதவி கொண்டு, ஒற்றுமையோடு, இந்த பஞ்சாயத்து யூனியன்களில் பணியாற்ற ஒவ்வொருவரும் பணித்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI P. S. SANTHANAM: தலைவர் அவர்களே, இப்பொழுது கொண்டு வரப்பட்டிருக்கும் பஞ்சாயத்து மசோதாவைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல பிரியப்படுகிறேன். பஞ்சாயத்து போர்டு தலைவரை

23rd September 1958] [Sri P. S. Santhanam]

அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படும் முறையானது நியாயமற்றது என்ற கருத்தினை சொல்ல நான் பிரியமுடையவனாய் இருக்கிறேன். ஏன் அதைச் சொல்லுகிறேன் என்றால், சென்ற மாதங்களில் சில பஞ்சாயத்து போர்டுகள் தலைவர்கள் தேர்தல்கள் நடந்தபோது சில தில்லுமுல்லுகள் நடந்திருக்கின்றன என்று சர்க்காருக்கு எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. 6-8-1958-ல் நடைபெற்ற ஒரு பஞ்சாயத்து போர்டு தலைவர் தேர்தலின் பொழுது, அங்கத்தினர்கள் வோட்டு போடுவதற்கு செல்லும் காலத்தில் சில இன்னல்களும், இடையூறுகளும் ஏற்பட்டிருக்கின்றன. அது சம்பந்தமாக சர்க்கார் மூலமாக கோர்ட்டுகளில் வழக்குகள் நடந்துகொண்டிருக்கின்றன. சென்ற மாதம் இரண்டாவது வாரத்தில் பூதமங்கலம் கிராமத்தில் தலைவர் தேர்தல் நடந்தபொழுது, வோட்டுப் போடச்சென்ற சில அங்கத்தினர்களை காலிகள் தூக்கிச் சென்று மறைத்துவிட்டதும், அதனால் தேர்தல் ஒத்திவைக்கப்பட்டதும் சர்க்காருக்குத் தெரியும். ஏன் இதை நான் சொல்லுகிறேன் என்று சொன்னால், அங்கத்தினர்களால் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டால், செல்வர்களும், சீமான்களும், நிலச்சுவான்தார்களும் தலைவர்களாக வரமுடியுமே தவிர, ஏழை எளியவர்கள் வரமுடியாது. அவர்கள் தேர்தலுக்கு நிற்க முடியாதவாறு இவர்கள் கெடுதல் செய்கிறார்கள் என்ற நிலை சர்க்காருக்கு தெரிந்திருந்தும், இந்த நிலையை மாற்றாமல் இருப்பது வேதனையை உண்டாக்குகிறதே தவிர, வேறு ஒன்றுமில்லை. நிலைமையை மாற்றி அமைக்க வேண்டுமென்ற கருத்தினை இந்த மன்றத்தில் முன் சொல்லிக்கொள்ள பிரியப்படுகிறேன்.

பஞ்சாயத்து யூனியன்களுக்கு தேர்ந்தெடுக்கப்படக்கூடிய அங்கத்தினர்களில் 3 அங்கத்தினர்கள் ஸ்தானம் ஹரிஜனங்களுக்கு தந்து கொடுத்திருப்பது கண்டு ஒரு விதத்தில் மகிழ்ச்சியும், இன்னொரு விதத்தில் வேதனையும் ஏற்படக்கூடிய நிலைமை இருக்கிறது. ஒரு யூனியனில் ஏறத்தாழ 50, 60 அங்கத்தினர்கள் இருக்கும்பொழுது, மூன்று ஹரிஜன அங்கத்தினர்கள் அங்கே வருவார்களேயானால், அவர்களின் வாக்குரிமை செல்லுபடியாகாது என்பதை அரசாங்கம் உணரவேண்டும். இந்த நிலையிலே சாதாரணமாக ஜன சங்கியை பிரகாரம் அங்குள்ள அங்கத்தினர்கள் 100 பேர்கள் இருப்பார்களேயானால், குறைந்தது எட்டில் ஒரு பகுதி அங்கத்தினர்கள் பதவியாவது ஹரிஜனங்களுக்குக் கொடுக்கப்படவேண்டுமென்ற கருத்தினை இந்த மன்றத்தில் தெரிவித்துக்கொள்ள பிரியப்படுகிறேன். அதே நிலையில் தான் சில பஞ்சாயத்துகளில் ஹரிஜனங்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கப்படவில்லை, இன்றைக்கு இந்த மன்றத்திலே இருக்கக்கூடிய 40 அங்கத்தினர்கள் கூட, ஜாதியின் பெயராலே வந்தவர்களே தவிர, கட்சியின் பெயராலோ, சபையின் பெயராலோ வந்தவர்கள் அல்ல என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். ஏனென்றால், எந்தக் கட்சியை சேர்ந்திருந்தாலும் சரி, ஹரிஜனங்கள் தனிப்பட்ட ரிசர்வ் செய்யப்படாத தொகுதியில் வரமுடியாது என்பதை மீண்டும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஹரிஜனங்கள் எங்கெல்லாம் 50 சத விகிதத்திற்கு மேற்கொண்டு இருக்கிறார்களோ, அங்கே அவர்களுக்கு தனிப்பட்ட ஒதுக்கப்பட்ட ஸ்தானம் ஒன்று இருப்பது மிகவும் அவசியம் ஆகும் என்பதை இந்த மன்றத்திலே எடுத்துக்காட்ட முற்படுகிறேன். ஏழை எளியவர்களுக்கும் பங்கு கொடுத்து நல்லதோர் முறையில் நிர்வாகம் நடத்தப்படவேண்டும் என்ற நோக்கத்தோடு கொண்டு வந்திருக்கும் இந்த மசோதாவில் பெண்களுக்காக தனிப்பட்ட ஸ்தானங்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. அதேமுறையில் ஹரிஜன பெண்களுக்கும் ஸ்தானங்கள் தனியாக ஒதுக்கப்பட வேண்டுமென்று நான் கருதுகிறேன். ஏன் அப்படி ஒதுக்க வேண்டுமென்றால், சில பஞ்சாயத்துகளில் 4, 5 கிராமங்கள் பொருத்தப்பட்டிருக்கின்றன, அம்மாதிரி பொருத்தப்பட்ட கிராமங்களில் ஒரு ஹரிஜன ஆணுக்கும், ஒரு ஹரிஜன பெண்ணுக்கும் ஸ்தானங்களை அவசியம் ஒதுக்கினால் தான் இந்த சர்க்கார் ஏழைகளுக்கு சலுகை காட்டுகிறது என்று நினைக்கக்கூடிய நிலை ஏற்படும். அப்படியில்லையென்றால், உண்மையிலேயே சர்க்கார் கொடுக்கும் சலுகைகளை நாங்கள் பெறுவதற்கு வழியே கிடையாது என்பதை இந்த மன்றத்தில் சொல்ல முற்படுகிறேன்.

[Sri P. S. Santhanam] [23rd September 1958

நிற்கவும், இப்பொழுது ஹரிஜனங்களுக்கு சில நன்மைகள் இந்த பஞ்சாயத்துகள் மூலமாக நடைபெற்றுக் கொண்டிருப்பதாக சிலர் கருத்தினை சொல்லுகிறார்கள்.

DEPUTY SPEAKER : **The hon. Member's time is up.**

1-10 p.m. *SRI A. S. DURAISWAMI REDDIAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இப்பொழுது சர்க்காரால் கொண்டுவரப்பட்டிருக்கிற கிராம பஞ்சாயத்து மசோதாவை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இவ்வளவு நாட்களாக கிராமங்கள் ஜில்லா போர்டுகளால் நிர்வகிக்கப்பட்டு வந்தன. கிராமத்தின் க்ஷேம நலங்களைக் கவனிக்க, ஜில்லா போர்டையும், ஜில்லா போர்டு அங்கத்தினர்களையும் எதிர் பார்த்திருக்க வேண்டியிருந்தது. இப்பொழுது, அந்த அதிகாரம், பரவலாகப் பங்கிட்டு, 358 யூனியன்கள் ஏற்படுத்தி, கிராமங்களிலெல்லாம் பஞ்சாயத்துக்கள் ஏற்படுத்தி, ராம ராஜ்யத்தை ஏற்படுத்த இந்த மசோதா வந்தது பற்றிச் சந்தோஷப்படுகிறேன். இந்த மசோதாவிலே அதிக அதிகாரம் கொடுக்கவில்லை, கொடுக்கவில்லையென்று பல கனம் அங்கத்தினர்கள் கூறினார்கள். இருக்கிற அதிகாரத்தை வைத்துக்கொண்டு, எவ்வளவோ நன்மைகளைச் செய்ய முடியும். அதிகாரம் அதிகமாக அதிகமாக, கட்சிப் பூசல்களும், சண்டைகளும்தான் அதிகமாகும். கிராம மக்களுக்குச் செய்யும் நன்மைகள் அதிகமாகிவிடாது. இருக்கும் அதிகாரத்தை வைத்துக் கொண்டே எவ்வளவோ செய்ய முடியும் என்பதைத் திரும்பவும் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

மசோதாவின் 12-வது பாராவில், பஞ்சாயத்து அங்கத்தினர் இல்லாத வரைகூட கௌன்சிலுக்கு தேர்ந்தெடுக்கலாமென்று இருக்கிறது. அது உசிதம் இல்லை. அப்படிப் போகும் அங்கத்தினர் பஞ்சாயத்தில் நடப்பதை கௌன்சிலுக்கு எடுத்துச் சொல்லவும், கௌன்சிலில் நடப்பதை பஞ்சாயத்துக்கு எடுத்துச் சொல்லவும், முடியாத நிலைமையில்தான் இருப்பார். ஆகவே, பஞ்சாயத்து அங்கத்தினரே தேர்ந்தெடுத்து அனுப்பப்படும் நிலைமை இருக்கவேண்டும்.

பஞ்சாயத்து யூனியனில் இருக்கும் சட்ட சபை அங்கத்தினருக்கு ஓட்டுரிமை இல்லை என்று என்றிருக்கிறது. ஓட்டுரிமை இல்லாமல் அங்கம் வகிக்க வேண்டிய அவசியமே இல்லை. ஏனென்றால், அப்படிப்பட்ட நிலைமையில், அந்த அங்கத்தினர்கள், கௌன்சில் கூட்டத்திற்கு போகவே மாட்டார்கள். போக இஷ்டப்பட மாட்டார்கள். ஆகவே, நான் சட்ட சபை அங்கத்தினருக்கும் ஓட்டுரிமை கொடுக்கவேண்டும் என்று கோருகிறேன்.

பஞ்சாயத்து தேர்தலுக்கு, பிளாக்கு பிளாக்காக பிரிக்கிறார்கள். அது ஜாதி, வகுப்பு என்ற அடிப்படையில் தான் போய் நிற்கும். முதலியார், ரெட்டியார், நாயக்கர் என்ற போக்கில் தான் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். ஆகவே, இது குறிப்பிட்ட வகுப்பினர் வருவதற்குத் தான் ஏதுவாகும். வார்டு, வார்டு ஆக, தனி ஓட்டாக வைத்தால் சௌகரியமாகவிருக்கும்.

கிராமத்தில் இருக்கும் புரம்போக்கு நிலத்திலே குடிசைகள் கட்டப்படுகின்றன. அது சம்மந்தமான அதிகாரம் ரெவின்யூ அதிகாரிகளிடம் இருக்கிறது.

அந்த அதிகாரம் எல்லாம் கிராம பஞ்சாயத்துக்கே கொடுத்துவிட வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் உடனடியாகக் கவனித்து ஆவன செய்ய சௌகரியமாக இருக்கும். அதே போல, தர்ம ஸ்தாபனங்கள், கோயில் இவற்றையெல்லாம், பஞ்சாயத்துக்கே கொடுத்துவிட வேண்டும்.

111-வது பிரிவில், லைசென்ஸ் கொடுக்கும் பவர், கமிஷனரிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இது அந்த கிராம பஞ்சாயத்து எக்ஸிக்யூடிவ் ஆபீசரிடமேயாவது இருக்கலாம். ஆகவே, கமிஷனரிடம் இருப்பது உசிதமில்லை.

23rd September 1958]

*SRI T. KARIA GOUNDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த பஞ்சாயத்து சட்டம் வந்திருப்பதை நான் மனப்பூர்வமாக, கிராமவாசி என்ற முறையிலே, ஆதரிக்க முன் வந்து இருக்கிறேன். கிராம பஞ்சாயத்தானது, மாண்டகு–செம்ஸ்போர்ட் சீர்திருத்தம் வந்த காலத்தில் முதன் முதலாக சட்டமாக்கப்பட்டது. மாண்டகு–செம்ஸ்போர்டு சீர்திருத்தம் நாட்டிலே அமலுக்கு வந்த காலத்திலே, பஞ்சாயத்துக்கு அந்த ஆரம்ப காலத்திலே, பணம், நிதி என்று ஒன்றும் கிடையாது. பத்து வருஷ நடைமுறையிலே, எதற்கெல்லாம், பொது ஜனங்களுடைய உழைப்பினால் உதவி கிடைக்குமோ அவையெல்லாம் ஆரம்பத்தில் செய்யப்பட்டன. பின்னால், 1930-ம் வருஷம், இந்த லோகல் போர்டு சட்டம் திருத்திய காலத்தில், ரோட் ஸெஸ் நிதியிலிருந்து ஒரு தொகை ஒதுக்கி, பஞ்சாயத்துக்குக் கொடுக்கப்பட்டு வந்தது. ஆனால், அந்தக் காலத்திலே, தற்போதுள்ள அளவு சர்க்காருக்கு வருவாய் இல்லாத காரணத்தினால், பஞ்சாயத்து போர்டுகளுக்கு வருமானம் வரக் காரணம் இருந்தாலும், பல அதிகாரங்கள் கொடுக்கப்படவில்லை. குறிப்பாக வட ஆற்காடு ஜில்லாவில், ஒரு பகுதியில் பஞ்சாயத்தும், மற்ற இடங்களில் இல்லாமலும் இருந்தன. அந்தக் காலத்தில் இன்ஸ்பெக்டராக இருந்த காலஞ்சென்ற ஸ்ரீ கோபாலசாமி அய்யங்கார் பஞ்சாயத்து நிர்வாகத்தில் சீர்திருத்தம் செய்யவேண்டும் என்று சுற்றுப் பிரயாணம் செய்து, அதை ஆரம்பித்து வைத்தார்கள். ஆகவே, ஜனநாயகம் பரவும் இந்தக் காலத்தில், வந்திருக்கும் இந்த சட்டமானது, போற்றுதற்குறியது. ஏதோ தங்களுக்கு அதிகாரம் இல்லாமல் போய்விடுகிறது என்று சொல்லலாம். ஆனால், இருக்கிற அதிகாரத்தை மக்கள் சரிவர உணர்ந்து நடத்துகிறார்களா என்று பார்த்தால், அது சரியாக நடந்தாலே போதும் என்று நினைக்கிறேன். இருக்கும் அதிகாரத்தை வைத்துக்கொண்டே கிராமங்கள் ரொம்ப முன்னேற முடியும். கிராமங்கள் அந்த முறையிலே முன்னேற்றம் அடையும் என்பதில் சந்தேகம் இல்லை.

தேர்தல் முறையில் ஒரு வார்டுக்கு நாலைந்து பேர் வைத்து ஒருவரே எல்லா ஓட்டுகளையும் வாங்கிக்கொண்டு போய் விடுகிறார்கள் என்று சொல்லப்படுகிறது. ஒருவருக்கே எல்லா ஓட்டுகளையும் போடச் சொல்லி விடுகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். அதனால் பிரதிநிதித்துவம் சரிவர நடைபெறவில்லை என்றும் சொல்லுகிறார்கள். அதைப்பற்றி நடை முறையில் செய்யாமல் எல்லோரும் அவசர அவசரமாக தேர்தல் முறையை மாற்றி அமைத்தார்கள். மறைமுகமான தேர்தல் வேண்டுமென்று சட்டத்தை இயற்றினார்கள். அதன் பிறகு தேர்தல் நடந்தது. இப்பொழுது என்ன சொல்லுகிறார்கள் என்றால் மறைமுகமாக தேர்தல் நடத்துவது நல்ல முறையல்ல என்று சொல்லுகிறார்கள். ஆகவே அப்படி மாற்ற வேண்டும் என்று சொல்வது அவ்வளவு நன்றாக இல்லை என்பதை மட்டும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

தேர்தல் நடத்தும்போது பணம் இருக்கிறது, அதனால் எல்லாம் நடைபெறுகின்றன என்று சொல்லுகிறார்கள். எல்லாவற்றிற்கும் தான் பணம் இருக்கிறது. எம்.எல்.ஏ.-க்கள் தேர்தலில்கூட பணம் இருக்கிறது. அதன் மேல் கோர்ட் இருக்கிறது, சூட் இருக்கிறது. அதைப்போலவே பஞ்சாயத்திலும் செய்து கொள்ளலாம். பணக்காரர்கள்தான் செலவு செய்கிறார்கள் என்று சொல்வது சரியல்ல. செலவு செய்யக்கூடியவர்கள் தான் அதிகாரத்திற்கு வரமுடியும் என்பதை மறந்துவிடவேண்டும். மக்களுக்கு சேவை செய்ய வேண்டும் என்ற அடிப்படையில் வரவேண்டும். அந்த முறையில் தமிழ் அகம் தலை நிமிர்ந்து நிற்கிறது என்ற அளவில் இதை எல்லோரும் வரவேற்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு எனக்கு பேசுவதற்கு இந்த சந்தர்ப்பத்தைக் கொடுத்ததற்கு நன்றியை தெரிவித்துக் கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன். 1-20 p.m.

*SRI V. SUBBIAH NAICKER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1958-ம் வருஷத்திய பஞ்சாயத்து மசோதா இன்று பல நல்ல அம்சங்களை கொண்டதாக இருப்பினும் அதனுடைய அமைப்பு

முறையில், அதன் தேர்தல் முறையில், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் அமைப்பில் ஜில்லா அட்வைசரி கவுன்சிலில் இருக்கக்கூடிய பல அதிகாரங்களைப்பற்றி குறை கூருமல் இருக்க முடியாது. குறிப்பாக இன்றைய தினம் அரசாங்க அமைப்பில் விவசாயிகள் எப்படி வாழ்கிருர்கள் என்று பார்க்கவேண்டும். விவசாயிகளுக்கு எவ்வளவு சுகம் இருக்கிறது என்று பார்த்தால் இன்றைக்கு அவர்களுக்கு ஒரு வண்டிப் பட்டா வேண்டுமென்ருல் அவர்கள் 400 மைலுக்கு அப்பால் உள்ள இந்த சென்னை நகரத்துக்கு வந்து வாங்கவேண்டியதாக இருக்கிறது. வேறு எந்த இரும்பு சாமான்கள் வாங்க வேண்டியதாக இருந்தாலும் அவர்கள் இங்கு மௌண்ட் ரோடிலுள்ள இரும்பு உருக்கு ஐரன் அண்ட் ஸ்டீல் ஆபீசரைக் கண்டு அவர்கள் உத்தரவு பெற்று வாங்க வேண்டியதாக இருக்கிறது. அப்படிப்பட்டவர்களுக்கு இப்பொழுது பல அதிகாரங்களைக் கொடுப்பதைப் பார்த்தால் சந்தேகிக்க வேண்டியதாக இருக்கிறது. இப்பொழுது பல அதிகாரங்களை இந்த அரசாங்கம் கிராம அதிகாரிகளுக்கு கொடுக்கிருர்கள். அது ஆச்சரியத்தைக் கொடுக்கிறது. கிராமப் புறங்களைப்பற்றி அவர்கள் தெரிந்து தான் செய்கிருர்களா என்று சொல்ல முடியவில்லை. இப்பொழுது வீட்டுக்கு வரி போடச் சொல்லுகிருர்கள், தொழிலுக்கு வரி போடச் சொல்லுகிருர்கள், இன்னும் இன வரி என்றும் வாகன வரி என்றும் வரி போடச் சொல்லுகிருர்கள். இவைகளைப் பார்த்தால் சந்தேகமாகத்தான் இருக்கிறது. இப்பொழுது கிராம வாசிகளைப் பார்த்தால் அவர்களுக்கு வீடுகள் இருக்கின்றனவா என்றுகூட தோன்றுகிறது. அவர்கள் விவசாய துறையில் இருக்கக்கூடிய நிலைமையைப் பார்த்தால் அவர்களுக்கு வரி போட்டால் அவர்கள் எப்படி அந்த வரியை கொடுக்கப் போகிருர்கள் என்று நினைக்க வேண்டியதாக இருக்கிறது. இப்படிப்பட்ட வரிகளுக்கு எப்படி அவர்கள் இலக்காக முடியும். அவர்களுக்கு உதவியாக 45 நயா பைசா ஒதுக்கி பாக்கி தலைக்கு ஒரு ரூபாய் என்று பஞ்சாயத்து இயங்குவதற்கு நிதி ஒதுக்கப்படுகிறது என்ருல் அவர்களுக்குக் கொடுக்கக்கூடிய வேலைகள் என்ன, கிராம ரோடுகள், கிராம சுகாதாரம், கிராம மராமத்து இதற்கெல்லாம் ஒதுக்கியிருக்கும் அரசாங்கத்தின் மானியம் எங்கே, மத்திய அரசாங்கத்தினுடைய மானியம் எங்கே? மத்திய அரசாங்கம் மாகாண அரசாங்கத்திற்கு பல கோடி ரூபாய் கொடுத்திருக்கிருர்கள் அது எங்கே? அப்படி இவைகளுக்கு எல்லாம் மத்திய அரசாங்கத்தால் கொடுக்கப்பட்டிருக்கிறதா, ஏதாவது நிதி அமைக்கப்பட்டிருக்கிறதா என்ருல் அது இல்லை. கிராம ரஸ்தாக்களை எடுத்துக்கொண்டால் பல ஆயிரக்கணக்கான ரூபாய் செலவழிக்க வேண்டிய நிலையில் இருக்கின்றன. அதற்கெல்லாம் இதில் என்ன இருக்கிறது. இவைகளை சாதிக்க மாகாண அரசாங்கத்திற்கு மத்திய அரசாங்கம் கொடுத்த மான்யம் எங்கே? ஒருக்கால் அவைகள் எல்லாம் பெரிய பெரிய அணைக்கட்டுகளை கட்டுவதற்கும் நகரங்களில் சிமெண்ட் ரோடுகள் போடுவதற்கும் செலவு செய்யப் போகிருர்களா ? அல்லது தார் ரோடுகள் போடுவதற்கு செலவு செய்யப் போகிருர்களா ? ஏற்கனவே ஜில்லா போர்டுகளுக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள் எங்கே, ஜில்லா பிரசிடெஸ்ண்டுக்கு இருந்த அதிகாரங்கள் எங்கே, இப்பொழுது ஜில்லா யூனியன் கமிஷனர்கள் என்று போட்டு யூனியன் கவுன்சிலுக்கு இருக்கக்கூடிய சேர்மனுக்கு அந்த அதிகாரம் இல்லாத வகையில் இருக்கிறது. ஆகவே அவர்களுக்கு அதிகாரம் நிறைய கொடுக்க வேண்டும். மற்றும் கிராம வளர்ச்சிக்கு கிராம பஞ்சாயத்துகளுக்கு நிறைய பணம் ஒதுக்கிக் கொடுக்க வேண்டும். அப்பொழுதுதான் கிராம பஞ்சாயத்துகள் நல்ல முறையில் இயங்க முடியும் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த பஞ்சாயத்து மசோதாவானது நம்முடைய மாகாணத்திற்கு பெருமை தரக்கூடியது மாத்திரம் அல்ல, இது பல மாகாணங்களுக்கு ஒரு வழி காட்டியாக அமையும் என்பதை நாம் எதிர் பார்க்கலாம். பஞ்சாயத்துகளுக்கு எந்த அளவு அதிகாரங்களைக் கொடுத்து அவைகள் தாங்களாகவே இயங்க முடியும், தன்னுடைய காரியங்களை சாதித்துக்கொள்ள முடியும் என்று சோதித்துப் பார்ப்பதற்காகத்

23rd September 1958] [Srimathi T. N. Anandanayaki]

தான் இதைக் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட சிறந்த சட்டத்தை ஏதாவது ஒரு மாகாணம் முதலில் செய்திருக்கிறதா என்று பார்த்தால் அது நம்முடைய மாகாணம் தான் செய்திருப்பதாகத் தெரிய வரும். அப்படிப்பட்ட ஒரு பெருமை நம்முடைய மாகாணத்திற்கு இருக்கிறது. அண்ணல் காந்தியடிகள் கனவு கண்ட கிராம ராஜ்யத்தை நாம் இப்பொழுது நினைவுபடுத்துகிறோம். அந்த முறையில் நாம் ஈடுபட்டு வருகிறோம் என்பதை நாம் பெருமையாகச் சொல்லிக்கொள்ளலாம்.

இப்படிப்பட்ட பஞ்சாயத்து ஆக்ட் நமது நாட்டிற்கு புதிது அல்ல. இது எல்லோரும் அறிந்ததே. சோழ ராஜ்யத்தில் எந்த முறையில் ஆட்சி நடந்து வந்தது என்பது எல்லோருக்கும் தெரியும். எந்த அளவில் ஜன நாயக ஆட்சி இருக்க வேண்டும் என்ற அடிப்படையில் இதைக் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதைப்பற்றிய ஆட்சி நமது தமிழ் நாட்டு மக்களுக்கு புதிது அல்ல. ஏற்கனவேயே இப்படிப்பட்ட ஆட்சியில் தான் தமிழ் நாடு இயங்கி வந்திருக்கிறது. அதன் பிறகு அந்நிய ஆட்சி ஏற்பட்டதால் தான் அந்த முறை நமக்கு மறந்து போய்விட்டது. அப்படி மறந்திருந்த ஆட்சியைத்தான் இப்பொழுது நமது காங்கிரஸ் சர்க்கார் புதுப்பித்துக் காட்டுகிறது. இன்றைய காங்கிரஸ் அரசாங்கம் எவ்வளவோ பழைய பண்பாடுகளை தன்னுடைய ஆட்சியில் கொண்டுவந்து புகுத்துவதைப்போல் இதையும் கொண்டுவந்து புகுத்துகிறார்கள். பழைய பண்பாட்டைக் கொண்டுவரக் கூடிய ஆற்றல் படைத்த காங்கிரஸ் ஆட்சி தான் இதையும் இப்பொழுது கொண்டு வருகிறது. அந்த ஆட்சியின் மூலமாக இந்தச் சட்டத்தைக் கொண்டு வருகிறார்கள். பஞ்சாயத்து மூலமாக கிராம மக்களுக்கு பல அதிகாரங்களைக்கொடுக்க வேண்டும், கிராம ஆட்சியை தாங்களே நடத்திக் கொள்ள வேண்டும், அதற்கு வேண்டிய ஆற்றல் அவர்களுக்கு இருக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் இதைக் கொண்டு வந்திருக்கிறார்கள். அதற்கு வேண்டிய அதிகாரங்களையும் அவர்களுக்குக் கொடுத்திருக்கிறார்கள். இப்படிப்பட்ட பல அதிகாரங்களை பஞ்சாயத்து கவுன்சில்களுக்குக் கொடுத்து அவைகள் சரிவர ஆட்சியை நடத்துகிறார்களா, மக்களுக்கு வேண்டிய பல விதமான வசதிகளை செய்து கொடுக்க அவர்களுக்கு வாய்ப்பு கொடுப்பதற்கும் அதன் மூலம் அவர்கள் ஆட்சி நடத்துவதற்கும் அனுபவம் கொள்வதற்கும் இப்படிப்பட்டச் சட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறார்கள். அதற்காகவே அவர்களுடைய கையில் சில அதிகாரங்களையும் கொடுத்திருக்கிறார்கள். பலவிதமான வரிகளைப் போட்டு அவர்களே அந்த வரிகளை வசூலித்துக்கொண்டு தங்களுடைய ஆட்சியை தாங்களே நடத்திக் கொள்ளலாம் என்று வகுத்திருக்கிறார்கள். பஞ்சாயத்துகள் எந்தந்த முறையில் எந்தந்த வரிகளை விதித்து எந்தந்த முறையில் அவைகளை வசூலிக்கலாம் என்ற விதத்தில் ஆங்கிலத்தில் "ஐடியல்" என்று சொல்லுவார்களே அதைப்போலவே அமைத்திருக்கிறார்கள். அந்த முறையில் வீட்டு வரி, வாகன வரி முதலிய வரிகளைப் போட்டு அவைகளை எப்படி வசூலித்துக் கொள்ளலாம் என்றெல்லாம் திட்டம் போட்டு வகுத்திருக்கிறார்கள். எனக்கு முன் பேசிய கனம் அங்கத்தினர் சொன்னது போல் நமக்குத் தெரியும் பல கிராமங்களில் வீடுகளைப் பார்ப்பதே அறிதாக இருக்கும். அது எப்படி இருந்தாலும் கிராமங்களில் வரிகளை ஒழுங்கான முறையில் வசூலித்து அப்படி வசூலித்த வரியை மீண்டும் நல்ல முறையில் மக்களுக்கு பயன் அளிக்கும் வகையில் செலவழிக்க சில அதிகாரங்களையும் கொடுத்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட அதிகாரங்களைக் கொடுத்துவிட்டு அப்படி அவர்கள் சரிவர செலவு செய்கிறார்களா என்பதை மேல்பார்ப்பதற்காக சில அதிகாரிகளையும் நியமித்து, அதற்கு மேல் எக்ஸிக்யூடிவ் ஆபீசர்கள், இன்ஸ்பெக்டர்கள் இவர்களை நியமித்து அதற்கு மேல் ஏதாவது தவறுகள் நடந்திருந்தால் அதை கவனிக்க அரசாங்கம் அதில் தலையிட்டு அதை செப்பனிட வழி செய்திருக்கிறார்கள். இப்படி படிப்படியாக வெகு அழகாக இந்த பஞ்சாயத்து சட்டத்தை அமைத்து இருப்பதைக் குறித்து, அதிலும் கிராம ராஜ்யத்தை அமைக்கப்போகிற மந்திரி அம்மையார் அவர்கள் ஒரு பெண் குலத்திலிருந்து வந்து இருந்து இதைக் கொண்டு வருவதானது ஒரு தனியான மகிழ்ச்சியையும் கொடுக்கிறது, அப்படிப்பட்ட மகிழ்ச்சியுடன் இதை நான் வரவேற்கிறேன்.

எவ்வளவு நல்லெண்ணத்துடன் செய்தாலும் அதை நடை முறைக்குக் கொண்டு வரும்போது அங்கங்கே பல சங்கடங்கள் ஏற்படலாம், பல தவறு கள் நடைபெறலாம். சாதாரணமாக கல்வி என்பது மிக மிக முக்கிய மானது. அப்படிப்பட்ட ஒரு பொறுப்பை இன்றைக்கு இருக்கும் நிலைமையில் ப்ரைவேட் மானேஜ்மெண்ட் அதாவது தனியார் கையில் இருக்கிறது. ஓரளவு டிஸ்ட்ரிக்ட் போர்டு, முனிசிபாலிட்டி, கார்போரேஷன் முதலியவை கள் நடத்தினுலும் தனியார் நடத்தும் கல்வி ஸ்தாபனங்கள் நல்ல முறை யில் செவ்வனே நடைபெறுகிறது என்ற எண்ணம் மக்கள் மத்தியில் இப்பொழுது இருக்கிறது. அது உண்மையே. அப்படிப்பட்ட ஒரு முக்கிய மான இனத்தை இந்த எலிமெண்டரி எடுகேஷனை நாம் இப்பொழுது பஞ் சாயத்து கையில் கொடுக்கிறோம். அதனுல் கல்வித் தரம் கெட்டு விடாமல் நல்ல முறையில் அமைவதற்கு தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். எலிமெண்டரி எடுகேஷன் நல்ல முறையில் நடப்பதற்கு வேண் டிய சூபர்விஷனையும் அமைக்க வேண்டும். அது மிக மிக அவசியமானது. இதை அமுல் நடத்துவதில் மிகவும் கடுமையாக இருக்க வேண்டும்.

எனக்குத் தெரியும் சில பஞ்சாயத்து தலைவர்கள் வாங்கிய பணத்திற்கு கணக்கே வைத்துக்கொள்வது இல்லை. அப்படி கணக்கு வைத்துக் கொள் ளாமல் வாங்கிய பணத்தை ஏப்பம் விட்டிருக்கிறார்கள். அப்படி இருந்தும் அவர்கள் மேல் நடவடிக்கை எடுத்துக்கொண்டால் அவர்கள் தப்பித்துக் கொண்டும் வந்திருக்கிறார்கள். அந்த அளவுக்கு வராமல் செக்ஷன் 141 பிரகாரம் ஆடிட்டர்களை அதாவது கணக்குகளை தணிக்கை செய்கிறவர்களை நியமிக்கிறார்கள். அப்படி கணக்குகளை தணிக்கை செய்யும்போது தலை வரோ அல்லது வேறு எந்த அங்கத்தினராவது தவறு செய்திருந்தால், அதாவது பஞ்சாயத்து பணத்தை எடுத்து சரியான முறையில் பாதுகாக்கா மல் இருந்திருந்தால் அவர்களையெல்லாம் உடனடியாக பதவியிலிருந்து நீக்குவதோடு அவர்களின் மேல் க்ரிமினல் ஆக்ஷனும் எடுத்து வந்தால் தான் மக்களுக்கு இந்த அரசாங்கத்தின் மீது நம்பிக்கை ஏற்படும். அப்படி இல்லாமல் வருஷக்கணக்காக அவர்கள் பேரில் நடவடிக்கை எடுத்துக் கொண்டிருந்தால் அரசாங்கத்தின் மீது மக்களுக்கு நம்பிக்கை இருக்காது போய்விடும். அப்படி இல்லாமல் வருஷக் கணக்கில் வழக்கு தொடராமல் உடனடியாக அவர்கள் மீது நடவடிக்கை எடுத்து தண்டிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய அதிகாரங்களையும் கொடுக்க வேண் டும். அப்படியிருந்தால்தான் பொது மக்களிடமிருந்து தலைவர்கள் தப்ப முடியாது என்பதை தெரிவித்துக்கொண்டு, காலம் அதிகமாக இல்லை என்பதால் இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER: There are only two more hon. members in the list. I take it that the House has no objection to sit for ten more minutes.

SRI S. RAMALINGA PADAYACHI : சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்தப் பஞ்சாயத்து மசோதாவை ஆதரித்து நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இந்தச் சட்டத்தின் பிரகாரம் பஞ்சாயத்துக்களெல்லாம் எக்ஸிக்யூடிவ் ஆபீசர்களைக் கொண்டு தான் நடக்கவேண்டியிருக்கின்றன. அது அவ்வளவு பொருத்தமல்ல என்று நான் சொல்ல விரும்புகிறேன். ஏனெனில், பழைய காலங்களில், நம்முடைய தமிழ்நாடு சுயாட்சி பெற்றிருந்த அந்தக் காலத்திலே, மக்கள் தங்கள் குடும்பத்திலேயே தலைவனாக இருந்து, அதிலேயிருந்து கிராமத் தலைவர்களாக இருந்து வந்தார்கள். அதற்குப்பின் அரச பரம்பரையிலிருந்து வந்தார்கள். அதற்குப் பின் மகாத்மா காந்தியடிகள் முயற்சியின் காரணமாக நம்முடைய நாட்டுக்கு சுயராஜ்யம் வந்தது. நாடு முழுதும் கிராம ராஜ்யம் ஏற்படவேண்டும் என்பது அவருடைய கருத்தாகவும் இருந்தது. அவர் சொன்ன கிராம ராஜ்யம் தான் இப்பொழுது கிராமப் பஞ்சாயத்தாக வருகிறது. அப்படி வருகிற கிராம பஞ்சாயத்துக்களுக்கு தக்க முறையில்

23rd September 1958] [Sri S. Ramalinga Padayachi]

அதிகாரம் வழங்கப்படவேண்டும். இன்று அதிகாரம் பஞ்சாயத்துத் தலைவருக்கு வழங்கப்படாமல் எக்ஸிக்யூடிவ் ஆபீசர் மூலமாக கொடுத்திருப்பது அவ்வளவு பொருத்தமானதல்ல.

இதற்கு உதாரணமாக ஒரு கதை சொல்கிறேன். திருமணத்தன்று மாமியார் மருமகளுக்குப் பட்டம் கட்டுவது வழக்கம். அப்படிக் கட்டுவது, மாமியாருக்குள்ள உரிமைகளை மருமகளுக்கு கொடுத்துவிட்டதாக அர்த்தம். அன்றிலிருந்து மூன்றாவது நாள் அந்த மருமகள் மாமியாருக்கு கலத்தை கழுவி வைக்கும்போது "நீ இதையெல்லாம் செய்ய முடியாது; நீ சிறு பெண்; அனுபவம் போதாது; மாமியார் பட்டம் கொடுத்ததால் எல்லா அதிகாரமும் கொடுத்தாக நினைக்காதே" என்று மாமியார் சொன்னதாகச் சொல்வது உண்டு. அந்த மாமியார் சொல்லக்கூடிய ஏவலைத்தான் மருமகள் செய்துவந்தாளாம். அதுபோல் பஞ்சாயத்துக்கள் அமைப்பதிலும், தலைவருடைய ஏவலைத்தான் எக்ஸிக்யூடிவ் ஆபீசர் நடத்துவதாக இருக்கவேண்டுமே தவிர, எக்ஸிக்யூடிவ் ஆபீசர் தானே பார்த்துச் செய்யவேண்டும் என்பது அவ்வளவு பொருத்தமானதல்ல. முனிசிபல் கமிஷனர்களுக்கும் கார்ப்பொரேஷன் கமிஷனர்களுக்கும் அத்தகைய அதிகாரம் இருப்பதும் சிறந்தது அல்ல. மக்களுடைய தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டு வருபவர்களுக்குத்தான் அந்த அதிகாரம் இருக்கவேண்டுமென்று நான் சொல்ல ஆசைப்படுகிறேன்.

இன்று பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலில் வரக்கூடியவர்கள் நாளைக்கு சட்ட மன்ற உறுப்பினர்களாகவோ மந்திரிகளாகவோ கூட வர முடியும். அதேபோல, இன்று சட்ட மன்ற உறுப்பினர்காளாகவோ மந்திரிகளாகவோ இருக்கக்கூடிய வர்கள் நாளை பஞ்சாயத்துத் தேர்தலில் நின்று, பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மெம்பர்களாகவும் வரமுடியும். அப்படியிருக்க, இன்று அந்தயூனியன் மெம்பர்களாக வரக்கூடியவர்களையும், தலைவர்களாக வரக்கூடியவர்களையும் தகுதியற்றவர்கள் என்று நாம் எப்படி இன்று குறை சொல்கி றோமோ அதேமாதிரி நாளை நாம் அங்கு போகும்போதும் இங்கு இருக்கும் மந்திரிகள் அங்கு வரும்போதும் அப்பொழுது அவர்களையும் தகுதியில்லாத வர்களாகக் கருத இடமேற்படுகிறது அல்லவா? ஆகையால், இன்று பார்லிமெண்ட், சட்டசபை உறுப்பினர்களும் மந்திரிகளும் மக்களுடைய வோட்டுக்களைப் பெற்றுத்தான் வந்திருக்கிறார்கள். சட்ட மன்றத்திலே அங்கத்தினர்களாகவும் மந்திரிகளாகவும் வந்திருப்பவர்களும் மக்களுடைய வோட்டுக்களைப் பெற்றுத்தான் வந்திருக்கிறார்கள். பஞ்சாயத்து தலைவராகவும், பஞ்சாயத்து யூனியன் தலைவராகப் போகக்கூடியவர்களும் மக்களுடைய வோட்டுக்களைப் பெற்றுத்தான் வந்திருக்கிறார்கள். ஆகவே, எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர் அன்றாட நிர்வாகத்தை கவனிப்பவராகவும், பஞ்சாயத்து போர்டு வேறுபாடு இல்லாமல், பஞ்சாயத்து போர்டு தலைவர், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தலைவர் என்ற முறையிலேயே அவர்கள் யாருக்கும் பயந்து நடக்காமலிருக்க உரிமையும் அதிகாரமும் அளிக்கவேண்டும், இந்த மசோதாவில் அதற்கு வகை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, நேரம் முடிந்துவிட்டதால் என்னுடைய உரையை இத்துடன் முடித்துக்கொள்கின்றேன்.

DEPUTY SPEAKER : The hon. Member Sri Somasundaram, who is the next speaker, is not in his seat.

The House will now adjourn and meet again at 9 a.m. to-morrow.

The House then adjourned.